

சமய வழிபாட்டின் ஒரு அங்கமாக இருந்து
வருகிறது இந்திய பாரம்பரிய நடனம். அசைவிலே
அழகு. இசையிலே எழில்—எல்லாம் இறைவனுக்கு
அர்ப்பணம். பண்ணும் இசையும் பாரதக் கலைக்கு
பெருமை தேடித் தருகின்றன, எல்லாம்
இறைவனின் திருவடிகளில்
சரணடைகின்றன. சிவனே
நர்த்தனம் புரிந்த நடனக் கடவுள்
தானே. சிவதாண்டவம்
உலகத்தின் அசைவுக்கு
ஒரு சின்னமல்லவா?

இதைப் போலவே
தாவணகரே பருத்தி ஆலையில்
நாங்கள் கற்பனைக்கும் எட்டாத
நயத்துடன் தரமுள்ள துணிமணிகளை
பாரம்பரியகலை வடித்துத் தருகிறோம்.
ஒவ்வொரு வரின் ரசனைக்கேற்ப
எழிலான நெசவும் இழையின்
கைதேர்ந்த இணைப்பும்
எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தும்.

ஒடிஸ்ஸி ஒரிஸ்ஸாவில் கி.பி. இரண்டாவது நூற்றாண்டின்
ராணி கும்பா குகைகளில் தொல்பொருள் ஆராய்ச்சியை
அடிப்படையாகக் கொண்ட புராதன இந்திய நடனப் பாணி
என்று சொல்லப்படுகிறது. ஏழாவது நூற்றாண்டின் பழைய
கால கோவில்களிலிருந்து பதினைந்தாவது நூற்றாண்டு
வரையுள்ள கோவில்களை எடுத்துக் கொண்டால் நடனக்
சிலை கலையில் செதுக்கப்படாத கோவில் ஒன்றுகூட
ஒரிஸ்ஸாவில் இல்லையென்று சொல்லலாம். கலிங்காவில்
[illegible] ஆண்ட மன்னர்கள் கோவில் சடங்கு முறையாக
கோவில்களுக்காக நடனங்களைப் பேணிக்காத்து வந்தார்கள்.
பாணியில் பரத நாட்டியத்தை ஒத்திருந்தாலும், அதற்கே உரிய
[illegible] பண்புச் சிறப்புகளை உடையது ஒடிஸ்ஸி நாட்டியம்.
இதர வகை நடன பாணிகளில் காணப்படாத "திரிபங்கா"
ஒடிஸ்ஸி நடனத்தின் குறிப்பிடத்தக்க சிலைகளில் ஒன்றாகும்.

நயமிக்க துணிமணிகள் எங்களது பரம்பரைச் சொத்து

# தாவண்கெரே

தி தாவண்கரே காட்டன் மில்ஸ் லிமிடெட், தாவண்கரே-577 002.
ஷோரூம்:
நாகிபன்பேட், ஹுப்ளி 580 020, சித்ரதுர்கா ரோடு, தாவண்கரே-577 002.
காவேரி பவன், பெங்களூர் 560 009.

THOMAS/DCM/78/D/ TAM

# இடி அமீன்



உலக அரசியல் வரலாற்றில் இன்னொரு சர்வாதிகாரி நிராகரிக்கப்பட்டுள்ளார்.

உகாண்டா மக்கள் இடி அமீனின் எட்டு ஆண்டு ஆட்சிக் காலத்தில் என்னென்ன கொடுமைகளை அனுபவித்து இருப்பார் என்பதை விளக்குவதைவிட, இடி அமீனின் சில கிறுக்குச் செயல்களை விவரித்தாலே அந்த நாட்டு மக்களின் இன்னல்கள் புரிந்து விடும்.

நாட்டின் பொருளாதாரம் சிறப்பாக வேண்டுமானால் கரன்சி நோட்டுகளை நிறைய அச்சடிக்க வேண்டும் என்ற பொருளாதாரக் கொள்கைப் பிரகடனம் செய்த இவர், கரன்சி நோட்டு அச்சடிக்கும் வேலையைத் தமது சொந்தப் பொறுப்பில் வைத்துக் கொண்டு இஷ்டப்பட்டபோது அச்சடித்துத் தள்ளினார்.

பிரிட்டிஷ் அரசியால் மட்டுமே வழங்கப்படும் பிரிட்டிஷ் ராணுவத்தின் மிக உயர்ந்த பட்டங்களைத் தாமே சூடிக் கொண்டு, பிரிட்டிஷ் அரசையே தாம் தூக்கியெறிந்து விட்டதாகப் பிரகடனப் படுத்தியவர்.

ஐக்கிய நாடுகள் சபையில் பேசுவதற்காக அமெரிக்காவுக்குச் செல்ல இருந்த தருணத்தில் இவர் அமெரிக்க ஜனாதிபதிக்கு ஒரு செய்தி அனுப்பினார்: 'ஐ. நா. சபைக்கு நான் வரும் சமயத்தில் என்னை அமெரிக்க அரசின் விருந்தாளியாக அழைத்து உபசரிக்க வேண்டும் என்று உங்களுக்கு ஆணை பிறப்பிக்கிறேன்! அவ்வாறு என்னை அழைக்கா விட்டால் ஐக்கிய நாடுகள் சபையை உங்கள் நாட்டிலிருந்து வேறு நாட்டுக்கு மாற்றி விடுவேன்!' என்பதுதான் அச்செய்தி.

விக்டோரியா ஏரியின் நடுவே ஜனங்கள் வசிக்காத ஒரு தீவை நோக்கித் திடீரென்று ஒருநாள் விமானங்களைப் பறக்கச் செய்து அத்தீவின் மீது குண்டுகளைப் பொழியச் செய்து, பிறகு அங்கு போய் இறங்கி உலகு முழுவதுக்கும் ஒரு பிரகடனம் செய்தார். தாம் ஒரு புதிய தீவைக் கண்டுபிடித்து அதைக் கைப்பற்றியதாக அந்தப் 'பிரகடனம்' கூறியது.

அதிகார பூர்வமாகவும், தனிப்பட்ட முறையிலும் இவருக்கு எத்தனையோ மனைவிகள். இவருக்கு ஐம்பது வயது ஆனபோது ஐந்தாவது முறையாக வரைதிய இவர் திருமணம் செய்து கொண்ட சாரா என்ற இளம் பெண்ணுக்கு வயது பத்தொன்பது.

'வளர்த்த கடா மார்பில் பாயும்' என்ற பழமொழி பொதுவாக எல்லா சர்வாதிகாரிகளுக்கும் பொருந்தும் சொல். இடி அமீனும் அதற்கு விதி விலக்கு அல்ல. தம்மை மிக உயர்ந்த ராணுவப் பதவிக்கு உயர்த்திய மில்டன் ஒபொடேயைத் தூக்கியெறிந்து ராணுவ ஆட்சியை அமைத்த இவர், தாம் உயிரோடு இருக்கும்வரை தாம்தான் உகாண்டாவின் ஜனாதிபதி என்று பிரகடனப்படுத்தினார்!

ஒபொடே கிறிஸ்துவர் ஆனதால் உகாண்டாவில் வாழ்ந்த மூன்று லட்சம் கிறிஸ்துவர்களையும் சொல்லில் அடங்காத அளவுக்குக் கொடுமைப் படுத்தினார் அமீன்.

சரியான விசாரணை இன்றி இவர் அளித்த மரண தண்டனைகள் ஏராளம். ஒருவனைக் கொன்று அவனது பிணத்தை அப்புறப் படுத்த அடுத்ததாகத் தாம் கொல்லவிருப்பவனையே அவர் ஏவுவார்.

பிரிட்டிஷ், பாஸ்போர்ட் வைத்திருக்கும் ஆசியர்களை உடைமைகளைப் பறித்துக் கொண்டு நாட்டை விட்டுத் துரத்தும்படி கனவில் தமக்கு இறைவன் ஆணையிட்டதாகக் கூறி அவ்வாறே சுமார் ஐம்பதாயிரம் பேரைத் துரத்தியவர் இடி அமீன். இம்மாதிரி ஆசிய மக்கள் துரத்தப்பட்டதே உகாண்டாவின் சீர் குலைவுக்குக் காரணமாகியது.

தமது அரசைப் பழிக்கும் விதமாகப் பிரசுரம் ஆகாத ஒரு கையெழுத்துப் பிரதி வைத்திருந்தார் என்று குற்றம் சாட்டி ஒரு பிரிட்டிஷ் பேராசிரியருக்கு மரண தண்டனை விதித்தார். மனிதாபிமானமே முக்கியமெனக் கருதிய பிரிட்டிஷ் அரசு, இவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு தண்டனையை ரத்து செய்யச் செய்தது!

தமது சிற்றின்பக் கேளிக்கைகளுக்குத்தடையாக இருக்கின்றனர் என்பதால், 'துரோகம் செய்ததாக'க் குற்றம் சாட்டித் தமது இரு மனைவியருக்கும் மரண தண்டனை விதித்துக் கொன்றவர் இந்த ஜனாதிபதி! உகாண்டாவின் புரட்சி அணியினர் தான்சானியாவின் ராணுவ உதவி கொண்டு இடி அமீனின் ராணுவ ஆட்சிக்கு முடிவு கண்டு லூலே என்ற அறிவாளி தலைமையில் புதிய ஆட்சி அமைத்துள்ளனர்.

- பி. ரங்கநாயகி

# Kalki Shopping Page

Admired for beauty
Bought for performance

**Bharat TV**

**Urvashi**



*Available at :*

**Eljay Agencies**

994, Poonamallee High Road
Madras 84 Phone: 664895

ACIL BT 24/79

Admired for beauty
Bought for performance

**Bharat TV**

**Urvashi**



*Available at :*

**Phoenix Electronics**

50, Lattice Bridge Road
Adyar, Madras 20
Phone: 41.1208

ACIL BT 27/79



SHOWROOM 1
EXCLUSIVE

**BINNY'S**

Entire range of
BINNY TEXTILES
including silks.



VENKATESH
VASTRALAYA
P. LTD.

State Bank of Mysore Blg.
Opp. High Court,
Madras 600 001
Phone: 20201/2

Quick, Efficient, Streamlined

**Gini**

mini wet grinder

a must for every kitchen.




33-G-002

Vummidiars
Home Makers

VUMMIDIARS
SHOPPING CENTRE
Madras 600 002 Ph: 87794
18, South Mada St.
Madras 600 004 Ph: 73069

# Kalki Shopping Page

Admired for beauty
Bought for performance

**Bharat TV**

**Urvashi**



*Available at :*
**Raja Radio & Electricals**
228, Royapettah High Road
Madras 14   Phone: 841533

ACIL BT 26/79

Admired for beauty
Bought for performance

**Bharat TV**

**Urvashi**



*Available at :*
**4As Agencies**
14, South Usman Road
T'Nagar, Madras 17
Phone: 445366

ACIL BT 25/79

**Buy the Best VV Vest**

Fully fashioned VV Vests are designed to suit any age every chest !

Available in all leading stores

VV Vests & Agencies
76, Appu Mudali Street,
Mylapore, Madras-600 004
Phone : 72652



**அருந்துவீர்!**



இம்பீரியல்ஸ்

**ஆரஞ்ஜீலா**



இளையராஜா - இசையமைப்பாளர்



செல்வராஜ் - கதாசிரியர்



பாக்கியராஜ்
கதாநாயகன் - வசனகர்த்தா



ஸ்ரீ ஓவியாகன் - வில்லன்



கே. கே. சௌந்தரராஜன்
நாதஸ்வரக்காரராக நடிப்பவர்

# புதிய வார்ப்புகள்;
# கல்கி யின் வாழ்த்துக்கள்!






● ''குழந்தைகள் சிறப்பிதழ்'' பிற ஏடுகள் வெளியிட்டிருந்த குழந்தைகள் சிறப்பிதழ் களிலிருந்து — எதிர்பார்த்தபடியே — வேறு பட்டிருந்தது எனில் அதில் வியப்பில்லை.
தூத்துக்குடி வெ. சம்பந்தம்.

● ஒளி சிந்தும் குத்து விளக்கின் அடியில் மறைந்து இருக்கும் இருளைப் பற்றியும் கவலைப் பட உள்ளங்கள் இருக்கின்றன என்பதை விளக்கியது 'இவர்களையும் சற்றுக் கவனி யுங்கள்' பகுதி.
விருத்தாசலம் ஜி. சாந்தாராஜ்

● தாங்கள் 'குழந்தைகள் சிறப்பிதழ்' தயா ரித்திருந்த முறை, பாராட்டும் வகையில் அமைந்திருந்தது. தங்கள் இணை ஏடான கோகுலம் தற்சமயம் இல்லாத ஏக்கத்தை உணராமல் இருக்க இயலவில்லை.
மதுரை மு. கந்தப்பன்

● குழந்தைகள் சிறப்பிதழ் - குழந்தைத்தன மாகச் செயல்படாது மிகவும் பொறுப் போடும், கவனத்தோடும் தயாரித்திருக்கி றீர்கள்.
திருப்பாப்புலியூர் த. சிவசிவராஜன்

● குழந்தைகள் சிறப்பிதழ் கண்டேன். குழந் தைத் தனமாக இருந்தது. படித்து முடித்த வுடன் ''பீடிங் பாட்டிலை'' கையில் எடுத்துக் கொள்ள வேண்டும் போல் இருந்தது. உம்மை அதாலேயே தலையில் ஒரு போடு போட!
சிதம்பரம் சி. பி. ஸ்ரீதர்

● டெல்லி சிறுவன் முகேஷினுடைய குறிக் கோளைப் படித்த பொழுது - அவனது இப்போ தைய குறிக்கோள் — ஒரு ஜதை டிராயர், ஒரு ஸ்வெட்டர், ஒரு ஜோடி செருப்பு — இவை கூட ஒரு இந்தியச் சிறுவனுக்கு இல்லை என்ப தைப் படிக்கும் பொழுது அழுகையே வந்து விட்டது. ஒவ்வொரு இந்தியனும் இதனைக் கண்டு வெட்கித் தலைகுனிய வேண்டும்.
கோப்பனூர் புதூர் ரங்கசாமி

● 'இவர்களையும் சற்றுக் கவனியுங்கள்' என்று சொல்லி மனசை என்னவோ செய்து விட்டீர்கள். அந்தக் கட்டுரையைப் படித்த தும் குழந்தைகளிடத்தில்தான் தெய்வம் இருக்கிறது என்ற கருத்து பொய்த்துப் போகும் அளவிற்குப் பரிதாபமாக இருந்தது.
சென்னை—92 சீதா ராஜகோபாலன்

● 15.4.79 இதழில் வெளியிட்ட குழந்தை களின் படங்கள் அனைத்தும் எங்களுடைய கண்களையும் கருத்தையும் கவர்ந்தன. அட் டையில் இடம் பெற்ற குழந்தை முதல் இறுதிப் பக்கத்தில் இடம்பெற்ற குழந்தைகள் வரை சம்பந்தப்பட்ட தாய், தந்தையரிடம் தெரி வித்துத் திருஷ்டி சுத்திப் போடச் சொல் லுங்கள், ப்ளீஸ்!
கும்பகோணம் எஸ். தேவராஜன்.

● ரங்கநாயகி ஒரு சாதாரணப் பெண்தான். ஆசையும் பாசமும் நிரம்பியவள்தான். மனிதத் தன்மைகள் மிகுந்து தவறுகளும் செய்யக் கூடியவள்தான். ஆனால் விதியின் விளையாட்டு அவளையே உன்னத நிலைக்கு உயர்த்திவிட்டது. மனிதனுக்குள்ளேயே தெய்வம் உள்ளது என் பதற்குச் சாட்சியாக லோகாயதமான அனைத் தையும் துறந்து நிற்கிறாள் அவள்.
சென்னை—17 கே. நடராஜன்

● நடுவில் ஒரு பிரச்னைக்குரியதாக்கப் பட்டா லும் ராஜ கர்ஜனையின் முடிவு அருமையாக அமைந்துள்ளது. மஞ்சுளா தேவி — பஸவ ராஜ் — ரங்கநாயகி — இப்புகழ்தான் இவர் களின் காதலின் புனிதத் தன்மை நேர்மை யாகப் படைக்கப் பட்டுள்ளது.
சென்னை—30 ஸ்ரீ ராஜாராமன்

● இலக்கியச் சர்ச்சைகளுக்கிடையே வீறு நடை போட்டது ராஜ கர்ஜனை. அருமையான படைப்பு; அற்புதமான பாத்திரங்கள். பாத் திரங்களுக்கு உயிரூட்டின 'விநு'வின் கை வண்ணங்கள். விநுவின் சித்திரங்கள் அற் புதம்.
நங்கவள்ளி இல. கண்ணன்

● ரங்கநாயகியை அவ்வளவு பாடுபட்டுக் காப்பாற்றிய பசவராஜ் கடைசியில் தன் காதலியையும், தாயையும் பார்த்து ஒரு வார்த்தையாவது பேசியதாக முடித்திருந் தால் கொஞ்சம் ஆறுதலாக இருந்திருக்கும்.
திருமங்கலக்குடி எஸ். ராஜேந்திரன்

● கோவி. மணிசேகரனின் ராஜ கர்ஜனை எத்தனை ஆண்டுகள் ஆனாலும் மறக்க முடி யாத காவியம். ஆனால் முடிவுதான் சப்பென்று இருக்கிறது. ரங்கநாயகி மறக்க முடியாத கதா பாத்திரம்.
செங்கோட்டை ஏ. எம். ராஜ்

● ராஜகர்ஜனை ஒரு வீர காவிய கர்ஜனை. எதிர்பாரா முடிவு உடலையும், உள்ளத்தையும் உலுக்கி எடுத்துவிட்டது. பசவராஜின் முடிவு உயர்வான ஒன்று. மஞ்சுளாதேவி, பசவ ராஜின் காதலுக்காக தீக்குளித்தது அதைவிட உயர்வானது. ரங்கநாயகி பசவராஜின் ''இலக்குமண உத்தரவால்,'' தன் காதலையே தியாகம் செய்தது அனைத்துக்கும் சிகரம்.
புதுடில்லி வேலூர் சுந்தர்.

● வீரத்திற்கு இலக்கணமான ''திப்பு''வும் நட்பிற்கு இலக்கணமான ''பசவராஜு''ம்'' என் கண்களில் கண்ணீரை வரவழைத்து விட்டனர்.
சென்னை 90 தி. நாராயணன்



# என்னுடைய பவனி!





செம்பியன்

சில காலம் முன்பு போக்குவரத்து அமைச்சர் பொன்னையன் 'பீக் அவ'ரில் பஸ்ஸில் பயணம் செய்து திரும்பினார். அவர் பின்னோடு பத்திரிகை ஆசிரியர்கள் நிருபர்கள் அதிகாரிகள், புகைப் படக்காரர் முதலியோர் சென்றனர். தினசரிகளில் எல்லாம் அமர்க்களப்பட்டது.

பத்து நாள் கழித்து. 'அமைச்சர் பயணம் செய்து திரும்பியதில் என்ன பலன் ஏற்பட்டிருக்கிறது பார்க்கலாம்' என்ற கருத்தில் அவர் சென்று வந்த ரூட்டிலேயே நானும் பீக் அவரில் பயணப் பட்டேன்.

''அம்மணி! அமைச்சர் வந்த போது பஸ், ஸ்டாப்பிங்கில் நிற்காமல் தள்ளி நிற்பதாகக் குறைப்பட்டுகிட்டீங்களே? இப்போ நிலைமை சரியாயிருக்கா?'' என்று ஆபீஸ் போகும் பெண்மணியைக் கேட்டேன்.

''ஓ! சரியாயிருக்கே!'' என்று அவர் சந்தோஷமாகச் சொன்னார். ''இப்பல்லாம் பஸ் சரியா ஸ்டாப்பிங்கிலேயே நிக்குது. என்ன, நாங்க ஸ்டாப்பிங்கிலிருந்து தள்ளி நிக்கப் பழகிக்கிட்டிருக்கோம். அங்கிருந்து பஸ்ஸைப் பிடிக்க ஸ்டாப்பிங்கிற்கு ஓடறோம்!''

'அடடா! அமைச்சரின் பஸ் பயணத்தால் எவ்வளவு முன்னேற்றம்!' என்று அதிசயித்தபடி இன்னொருவரிடம், ''ஏன் ஸார்! இந்த ரூட்டிலே இன்னும் இரண்டு பஸ்கள் கூடுதலாக விட்டால் தேவலாம் என்று அமைச்சரிடம் புகார் செய்தீங்களே...'' என்று ஆரம்பித்தேன்.

''அந்தக் குறை உடனே தீர்ந்து போச்சே!'' என்றார் அவர். ''மறுநாள் முதல் இரண்டு புதிய பஸ்கள் இந்த ரூட்டில் ஓடுகின்றன. அதே சமயத்தில் வேறு மூன்று பஸ்கள் — இந்த ரூட்டில் ஓடிக் கொண்டிருப்பவை - பிரேக் டவுன் ஆகிப் பணிமனைக்குச் சென்று விட்டன. இன்னும் ரிப்பேர் ஆகித்திரும்பலே. ஆனா பாவம் அமைச்சர் அதுக்கு என்ன பண்ணுவார்?''

''வாஸ்தவம்தான்'' என்று கூறி விட்டு, பள்ளி மாணவர்களைப் பார்த்து, ''என்ன தம்பி! 'பஸ் சரியான நேரத்துக்கு வரலேன்னா பள்ளிக் கூடத்துக்குச் சரியான டயத்துக்கு எப்படிப் போய்ச் சேர முடியும்'னு அமைச்சரைக் கேட்டியே? இப்ப பஸ் சரியான டயத்துக்கு வருதா?'' என்று வினவினேன்.

''ஓயெஸ்!'' என்று அந்த மாணவன் உற்சாகமாகச் சொன்னான். ''பஸ் அதனுடைய டயப்படி சரியான நேரத்துக்கு வந்துடறது. அமைச்சரே சொன்ன பிறகு தாமதமாக வருமா? அதனால் பள்ளிக் கூட கடிகாரம்தான் வேகமா ஓடுதுன்னு ஹெட்மாஸ்டர்கிட்டே சொல்லிட்டோம்'' என்றான்.

எனக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. 'எவ்வளவு முன்னேற்றம் பல்லவன் போக்கு வரத்தில்!' என்று அதிசயித்தபடியே இன்னொருவரைப் பார்த்து, ''ஏன் ஸார், 'சைக்கிளில் போனாலும் கொல்லுது! நடந்து போனாலும் கொல்லுது'ன்னு பஸ் பற்றி அமைச்சரிடம் புகார் செய்தீர்களே..'' என்று தொடங்கினேன்.

அவர் இடைமறித்து, ''ஸார், நான் சின்ன விஷயத்தைப் பெரிது படுத்தியதற்காக ரொம்ப வருத்தப்படறேன். போரூரில் நடந்த பஸ் விபத்து பஸ்ஸில் பயணப் படுகிறவர்களையே பஸ் கொல்லும் என்று நிரூபித்திருக்கிறது. அப்படியிருக்க நடப்பவர்களைப் பற்றியும் சைக்கிளில் போவோரைப் பற்றியும் நான் கவலைப்பட்டது பிசகுதான்'' என்றார்.

'அப்படி வாருங்கள் வழிக்கு!' என்று சந்தோஷத்துடன் என் கடைசிக் கேள்வியை வீசினேன்: ''பிக் பாக்கெட் அடிப்பது அதிகமாயிடுச்சுன்னு புலம்பினீங்களே, அந்தப் பிரச்னையும் இப்போ இல்லையல்லவா?'' என்று பஸ் பயணி ஆறுமுகத்தைக் கேட்டேன்.

''கிடையவே கிடையாது! என்ன நாங்க பிக்பாக்கெட் கொடுக்காம இருக்க எச்சரிக்கையா இருந்து பழகிட்டோம். உங்களை மாதிரி பத்திரிகைக்காரங்க பேட்டி, விசாரணைன்னு வரும்போதுதான் கேள்வி கேட்கிற ஜோரிலே அஜாக்கிரதையாக இருந்துடறோங்க'' என்றார் ஆறுமுகம்.

எனக்குப் பகீரென்றிருந்தது! ஜிப்பா பாக்கெட்டைத் தடவிப் பார்த்தேன். உள்ளே கையை நுழைத்தேன். பாதாளம் வரை சென்றது! புத்தம் புது பிளேடு தன் வேலையை அருமையாகச் செய்திருந்தது.

என் முகம் போன போக்கைப் பார்த்து, ''என்ன ஸார்? என்ன ஆச்சு?'' என்றார் ஆறுமுகம்.

''ஒன்றுமில்லே'' என்று சமாளித்து, அடுத்த ஸ்டாப்பிங்கில் பஸ் நின்றதும் இறங்கிக்கொண்டேன். காரியாலயங்கள் பள்ளிகள் முதலியன 'பீக் அவர்' கூட்டத்தைச் சமாளிக்க வேலை தொடங்கும் நேரத்தை அமைச்சர் யோசனைப்படி Stigger பண்ணுகின்றனவோ இல்லையோ, என் நடை அன்று தள்ளாடிப் போனது என்னவோ உண்மை!



கல்கி

1979 ஏப்ரல் 29
சித்தார்த்தி சித்திரை 16
மலர்: 37 இதழ்: 39




# பெரியார் காட்டிய பண்பாடு

சேலம் நகரசபையில் முதலமைச்சர் காமராஜர் உருவப்படத்தைத் தந்தை பெரியார் திறந்து வைத்துப் பேசவிருந்தார்.

அழைப்பிதழ் — நிகழ்ச்சி நிரலில் வழக்கம் போல் ''கடவுள் வாழ்த்து'' என்று அச்சிட்டு விட்டார்கள்! அப்புறம்தான் ஞாபகம் வந்து கையை உதறினார்கள். 'பெரியார் வருகிறாரே, வேண்டுமென்றே செய்துவிட்ட விஷமத்தனம் என்று அவர் எண்ணி விடாதிருக்க வேண்டுமே' என்று கவலைப் பட்டார்கள். அவர் கூட்டத்துக்கு வருமுன்னரே கடவுள் வாழ்த்துப் பாடி நிகழ்ச்சிகளைத் தொடங்கி விடலாம் என்று தீர்மானித்தார்கள். ஆனால் பெரியார் காலம் தாழ்த்தாது வந்து அமர்ந்து விட்டார்! அது மட்டுமல்ல, மைக்கில், ''முதலில் கடவுள் வணக்கம்'' என்று தாமே அறிவிக்கவும் செய்தார்!

இதுபற்றி அன்றிரவு அவரை நண்பரொருவர் கிண்டல் செய்த போது, பெரியார் குலுங்கிச் சிரித்து, ''அதுலே என்ன கெடக்குதுங்க? காமராஜர் படத்தைத் திறந்து வைக்க, அவரோட சாதனைகளைச் சொல்ல நம்மை அழைச்சிருக்காங்க. அங்கே போய் வந்த வேலையை வுட்டுப் போட்டுக் கடவுள் வாழ்த்து பாடலாமா கூடாதான்னு சர்ச்சை எதுக்குங்க? நம்ப கருத்தைச் சொல்லத்தான் வெளியே நம்ம மேடைங்க இருக்குதுங்களே!'' என்றார்.

தந்தை பெரியார் நினைவாகச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஏற்படுத்தப் பட்டுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில், நெ. து. சுந்தர வடிவேலு பேசியபோது தெரிவித்த சம்பவம் இது.

பெரியாருடைய பண்பாட்டைத் தெள்ளத் தெளிவாக்குகிறது.

ஜனநாயகத்தில் மாற்றுக் கருத்தை ஒப்புக் கொள்ளா விடினும் மாற்றுக் கருத்து ஒன்று இருக்க முடியும் என்பதை ஒப்புக் கொண்டேயாக வேண்டும். மாற்றுக் கருத்து இருப்பதைச் சகித்துக் கொள்ளவும் பழக வேண்டும். அதனை ஏற்காவிடினும் மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். இதெல்லாவற்றுக்கும் மேலாக விட்டுக் கொடுக்கப் பழக வேண்டும்.

அடிப்படையான கொள்கைகளை விட்டுத் தர வேண்டியதே இல்லை. ஆனால் நடைமுறையில் சின்னச்சின்ன சிக்கல்கள் ஏற்படும்போது முரட்டுப் பிடிவாதம் செய்யாமல் பெருந்தன்மையுடன் விட்டுக் கொடுக்கப் பழக வேண்டும். அப்போதுதான் ஜனநாயகம் இலகுவாக இயங்க முடியும். இதை ராஜாஜி பலமுறை சொல்லி, எழுதி, வாழ்க்கையில் கடைப்பிடித்துக் காட்டியிருக்கிறார். ஈ. வே. ரா. பெரியாரும் இந்தப் பண்பாட்டினை மேற்படி நிகழ்ச்சியில் தாம் நடந்து கொண்ட விதத்திலேயே வெளிப்படுத்தியிருக்கிறார்.

பெரியார் காண்பித்த அந்தப் பண்பாட்டினை அவருடைய சீடர்கள் என்று சொல்லிக் கொள்ளும் எல்லாத் தரப்பினரும் கட்சியினரும் கடைப் பிடித்தால் காஞ்சி சங்கர மடத்துக்கு அருகேயே பெரியார் சிலையை வைப்பதா வேண்டாமா என்ற சர்ச்சை அவர்களுக்குள்ளேயே எழாது; சட்டசபை பகிஷ்காரத்துக்கு அவசியமிராது; ஆசைத்தம்பிக்கு இறுதி மரியாதை செலுத்த வந்தவர்களுக்கு கல்லெறி மரியாதை கிடைத்திருக்காது!

நிறைய வேலை இருந்தது. மேஜையின் மீது மட்டுமே ஏழு 'கேஸ்கள்' இருந்தன. அவைகளை முடித்து விட்டு பீரோவிலிருக்கும் 'கேஸ்'களை எடுக்க வேண்டும். முதல் கட்டை எடுத்துப் பிரித்து வைத்துக் கொண்டேன்.

''லீலாம்மா, செரியன் சார் கூப்பிடறார்'' என்று பியூன் கிருஷ்ணசாமி வந்து சொன்னான்.

செரியன் சீனியர் குமாஸ்தா. எனக்கு நேரடி மேற்பார்வையாளன். அதாவது, அவனுக்குக் கீழ் வேலை செய்யும் ஆறு ஜூனியர் குமாஸ்தாக்களில் நான் ஒருத்தி.

அவிழ்த்த கட்டைப் பழையபடியே மறுபடியும் கட்டி வைத்து விட்டு செரியனைப் பார்க்கப் போனேன்.

செரியனுக்கு இருபத்தெட்டு அல்லது இருபத்தொன்பது வயதிருக்கும். மலையாளி கிறிஸ்துவர். நல்ல சிவப்பு நிறம். அடர்த்தியான தலைமுடி. எப்போதும் 'பாண்ட்' டும் பனியனும் போட்டுக் கொண்டுதான் ஆபீசுக்கு வருவான். பனியன் என்றால் சாதாரண பனியன் அல்ல. பலவிதமான நவீன மோஸ்தர் கலர் பனியன்கள். ''வில் யூ லவ் மீ?'' ''ஐ லவ் யூ'' போன்ற வாசகங்கள் அச்சடித்திருக்கும் சில பனியன்களில்.

''கம் மிஸ் லீலா. ப்ளீஸ் ஸிட் டவுன்'' என்றான் என்னைப் பார்த்ததும் அழகாகப் புன்னகை செய்தபடியே.

உட்கார்ந்தேன்.

''இந்த 'கேஸ்' பார்க்கலாம்னு எடுத்துக் கிட்டேன். உங்க 'ஹேண்ட்ரைட்டிங்' பார்த்ததும் உங்களைக் கூப்பிட்டேன்.''

''ஏதாவது தப்பு இருக்கா?''

''இன்னும் நான் பார்க்கவே இல்லையே!''

''ஐ ஸீ.''

''உங்க 'ஹேண்ட்ரைட்டிங்' ரொம்ப 'ப்யூட்டி'புல்லா இருக்கு.''

''இதை எவ்வளவோ தடவை சொல்லிட்டீங்க. இருந்தாலும் மறுபடியும் தாங்க்ஸ். நீங்க கேஸ் பார்த்ததுக்கப்புறம் ஏதாவது கேட்க வேண்டியிருந்தாக் கூப்பிடுங்க. இப்ப நான் போறேன். நிறைய வேலை இருக்கு'' என்று கூறி எரிச்சலை அடக்கிக் கொண்டு எழுந்தேன்.

''அடேடே, உட்காருங்க. உங்களுக்கு இன்னிக்கு 'மூட்' சரியில்லே போலிருக்கு. ஒன் மினிட்.''

''யெஸ்.''

''இந்த மார்ஜின் இவ்வளவு சிக்கனமா விட்டிருக்கீங்களே! நான் 'கரெக்ஷன்ஸ்' போடறதுக்கே இடமில்லையே. இன்னும் கொஞ்சம் தாராளமா மார்ஜின் விடக் கூடாதா?''

''நோ டெட். ஆனா நீங்க கரெக்ஷன் எதுவும் போட வேண்டிய தேவை இருக்காதுன்னு நினைக்கிறேன்'' என்று சொல்லிவிட்டு மேற்கொண்டு அவன் பேசுவதற்கு இடமளிக்காமல் விருட்டென்று அங்கிருந்து அகன்று விட்டேன்.

என் இடத்தில் வந்து உட்கார்ந்து கொண்டேன்.

''பதினைஞ்சு நிமிஷம் வேஸ்ட்'' என்று அலுத்துக் கொண்டே முதல் கட்டை மறுபடியும் எடுத்து வைத்துக் கொண்டேன். அதை அவிழ்த்துப் படிக்கத் தொடங்கினேன்.

''லீலாம்மா, சூபரிண்ட் ஐயா கூப்பிடறாரு'' என்று பியூன் வந்து சொன்னான்.

''அட கடவுளே'' என்று கேஸ் கட்டை மறுபடியும் கட்டி வைத்து விட்டு இருப்பிடத்தை விட்டு எழுந்தேன்.

சூபரிண்ட் ஐயா என்று பியூன் குறிப்பிட்டது அலிகானை.

அலிகானுக்கு ஐம்பது வயதிருக்கும். அவரை விட வயதில் சிறியவர்களெல்லாம், அவருக்குப் பல வருஷங்களுக்குப் பிறகு இந்த நிறுவனத்தில் சேர்ந்தவர்களெல்லாம் எற்கெனவே அதிகாரிகளாகவும், உயர் அதிகாரிகளாகவும் ஆகி விட்டார்கள். அவர் மட்டும் இன்னும் சூபிரண்டாகவே இருக்கிறார்.

அலிகானுக்கு இரண்டு மனைவிகளாம். இருவர் மூலமாகவும் பதினொரு குழந்தைகள் இருந்தன. ஆகவே எப்போதும் அவருக்குப் பணக் கஷ்டம், தொந்தரவு, கடன் என்று இருந்து கொண்டே இருக்கும்.

அலிகானுக்கு ஆபீஸ் வேலைகள் தான் திறமையாகச் செய்யத் தெரியாதே ஒழிய முஸ்லீம் மதநூல்கள் முதலியவைகளில் நல்ல தேர்ச்சி உண்டு. ஒரு மணி நேரம் தங்கு தடையின்றி அவைகளைப் பற்றிப் பேசும் திறமையும் அவருக்கு இருந்தன.

''குட் மார்னிங் ஸார்.''

''குட் மார்னிங். உக்காருங்கம்மா''

உட்கார்ந்தேன்.

''உங்க கேஸ் பார்த்துட்டேன். செரியன் ஒண்ணுமே எழுதாம சும்மா இனிஷியல் போட்டு அனுப்பிச்சுட்டான். சரியா பார்த்தானா இல்லையா?''

''பார்த்திருப்பார். அவரையே கூப்பிட்டுக் கேக்கறது தானே சார்?''

''கேட்டா ஏதாவது ஏடாகூடமாப் பதில் சொல்லுவான். எப்படியோ போகட்டும்....

ஹேமா ஆனந்ததீர்த்தன்

பட் ஐ வாண்ட் டு டெல் யூ ஒன் திங்.''

''என்ன சார்?''

''இந்த மாதிரி 'ஆபீஸ் நோட்' ப்ளு பேர்ப்பர்ல, இல்லாட்டி வைட் ரூல்ட் பேப்பர்லே எழுதணும். இந்த மாதிரி ட்ராப்ட் ஷீட்லே எழுதியிருக்கீங்களே?''

''எதுலே எழுதினா என்ன சார்? விஷயம் தானே முக்கியம்?''

''நோ. நோ. ப்ரொசீஜர்னு ஒண்ணு இருக்கு இல்லியா? அதை விடவே கூடாது.''

''செரியன் மார்ஜினைப் பத்திச் சொன் னான், நீங்க பேப்பரோட கலரைப் பத்திச் சொல்றீங்க. ஒருத்தருமே விஷயத்தைப் பத்திப் பேச மாட்டீங்களா?'' என்று மனத் தில் நினைத்துக் கொண்டேன்.

''ஓகே, சார். இனிமே கவனம் வெச்சுக் கிறேன்.''

''உங்க கிட்ட ப்ரைவேட்டா ஒண்ணு கேக்கலாமா?'' — நிமிரென்று அவர் வேறு விஷயத்துக்குத் தாவியதும் எனக்குப் பகீரென்றது.

''என்ன சார்?''

''உங்களால் ஒரு அம்பது ரூபா ஸ்பேர் பண்ண முடியுமா? ரொம்ப அர் ஜண்டாத் தேவைப்படுது. சம்பளம் வந்ததும் குடுத்துடறேன்.''

''இல்லியே சார். ஐ ஆம் வெரி சாரி. என் சம்பளம், பணத்தையெல்லாம் நான் எங்க அப்பா கிட்டக் குடுத்துட றேன். இனமும்-எம் செலவுக்கு வேண் டியதை மட்டும் கேட்டு வாங்கிப்பேன்.'' என்று ஒரு பொய்யைச் சொல்லி வைத் தேன். காரணம், கொடுத்தால் பணம் திரும்பி வராது என்று எனக்கு நன்றாகத் தெரியும்.

''அப்படியா? இப்படி இருக்கக் கூடா துங்க. உங்க இன்டிபெண்டன்ஸை நீங்க காப்பாத்திக்கணும்'' என்றார்.

நான் பதில் சொல்லாமல் மெதுவாகச் சிரித்து வைத்தேன்.

''ஆல் ரைட். யூ கேன் கோ. நான் இதைப் பார்த்து அக்கவுண்டன்டுக்கு அனுப்பிச்சுட றேன்'' என்றார்.

நான் சீட்டிற்குத் திரும்பி வந்து உட் கார்ந்து கொண்டேன். கட்டை அவிழ்த் தேன். விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து படித்தேன். படித்து முடித்த பிறகு

'நோட்' எழுதலாமென்று உட்கார்ந்தேன்.

ஒரு வாக்கியம் எழுதி முடித்தேன். இரண்டாவது வாக்கியம் தொடங்குவதற்குள்ளாக பியூன் கிருஷ்ணசாமி மறுபடியும் வந்தான்.

''என்னப்பா, அக்கவுண்டண்ட் கூப்பிட்டனுப்பினாரா?'' என்று நானே கேட்டேன்.

''ஆமாம்மா. கரெக்டாக் கண்டுபிடிச்சுட்டீங்களே'' என்றான்.

முதல் கேஸ் மறுபடியும் கட்டுப் போடப்பட்டது. நான் அக்கவுண்டண்ட் கேபினை நோக்கிப் புறப்பட்டேன். எங்கள் அக்கவுண்டண்ட் சுதாகர் ஒரு அதிசயக் 'காரெக்டர்.'

வயது ஐம்பத்தைந்தை நெருங்கிக்கொண்டிருந்தது. ஆனாலும் அவருடைய தோற்றம், நடை, உடை, பாவனை எல்லாம் நாற்பத்திரண்டு வயது மனிதரைப் போலத் தான் இருக்கும். அவர் தலைமயிர் அடர்த்தியாக இருந்ததுடன் ஒரு முடிகூட நரைக்காமல் இருந்ததுதான் ஆச்சரியம்.

''சைட்பர்ன்ஸ்'' வைத்துக் கொண்டு, டைட் பாண்ட்டும், உடலைக் கவ்வியபடி 'ஸ்லாக்'கும் அணிந்து கொண்டு வருவார்.

ஆள் நல்ல திறமைசாலி. கதைகளெல்லாம் எழுதுவார். மீட்டிங்குகளில் கேட்பவர்களைக் கவர்கிற மாதிரி பேசுவார். ஆபீஸ் நாடகங்களிலும் வெளியில் சில நாடகக் குழுக்களிலும் சேர்ந்து நடிப்பார்.

அவர் எழுதும் கதைகளில் முக்காலே மூன்று வீசமும் செக்ஸை அடிப்படையாகக் கொண்டதாகத்தான் இருக்கும். கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தேன்.

''வா லீலா'' என்றார். காரியாலயத்தில் எல்லாப் பெண்களையுமே அவர் இப்படித்தான் பேர் சொல்லி ஏக வசனத்தில் கூப்பிடுவார். அவர் வயதை உத்தேசித்தும் பதவியை உத்தேசித்தும் போனால் போகட்டும் என்று நாங்களும் பேசாமலிருக்கிறோம். ஆனால் அவருக்கு அது தெரியுமோ தெரியாதோ! தாம் எல்லாரிடமும் ஃப்ரீயாகப் பழகுவதாகவும் அதை அவர்களும் விரும்பி ஏற்பதாகவும் நினைத்துக் கொண்டிருக்கலாம். போய் உட்கார்ந்தேன்.

''உன் கேஸ் வந்திருக்கிறது'' என்றார்.

''அதுல ஏதாவது கேக்கணுமா?''

''இல்லே. அதைப் பார்த்ததும் உன் ஞாபகம் வந்தது. கூப்பிட்டேன்.''

நான் பேசாமலிருந்தேன்.

''நேத்து உன்னை ஆனந்த் தியேட்டரில் பார்த்தேனே?'' என்றார்.

நான் திடுக்கிட்டேன்.

''நான் நேத்து முழுக்க வீட்டை விட்டே வெளியிலே போகலியே! நீங்க எப்படிப் பார்த்திருக்க முடியும்?''

''நிச்சயமாப் பார்த்தேன். ஆனால் உன்னைக் கூப்பிட்டுப் பேச முடியலே.''

''என்னைப் போல வேறு யாரையாவது பார்த்திருப்பீங்க.''

''இல்லவேஇல்லே. உன்னையேபார்த்தேன்.''

''ஆச்சரியம்தான்.''

''இதிலென்ன ஆச்சரியம்? நான் உன்னைப் பார்த்தது என் கனவிலே. நேரிலே பார்த்தேன்னு சொன்னேன்'' என்று கூறிச் சிரித்தார். எனக்கு ஏதோமாதிரி இருந்தது. அப்படியானால் கனவில் கூட அவர் என்னையே நினைத்துக் கொண்டிருந்தார் என்பதைத் தானே மறைமுகமாகக் குறிப்பிடுகிறார்.

சே! என்னைவிட இட்டத்தட்ட முப்பது வயது பெரியவர். இப்படி அவருக்கு எண்ணங்கள் வரலாமோ? ஆனால் அவரை எப்படி கோபித்துக் கொள்ள முடியும்?

ஒருசமயம் நான் நினைப்பது போல இல்லாமல் அவர் யதார்த்தமாகச் சொல்லியிருந்தால்? நானும் பதிலுக்குப் பேசாமல் சிரித்து மழுப்பினேன்.

''போன வாரம் நான் 'முதலை'யிலே எழுதியிருந்த 'வாழாவெட்டிக் கணவன்' கதை படிச்சியா?'' என்று ஒரு கேள்வி.

''நீ எப்பக் கல்யாணம் பண்ணிக்கப் போறே? சொந்தத்துலேயே யாராவது பையன் இருக்கானா? வேற யாரையாவது நீயே பாத்து வெச்சிருக்கையா?'' — இப்படியெல்லாம் சில கேள்விகள்.

ஒரு தகப்பனாரைப் போல இருந்து கேட்கிறார், பதில் சொல்வோம் என்று நினைத்துப் பதில் சொல்லத்தக்க கேள்விகளும் அல்ல: நீங்கள் யார் இதையெல்லாம் கேட்பதற்கு? என்று எதிர்த்துச் சொல்லி விட்டுப் போய் விடக்கூடிய கேள்விகளும் அல்ல.

திக்குமுக்காடி, பாதி பதில் சொல்லியும் பாதி மழுப்பியும் ஒப்பேற்றுகிறேன்.

கடியாரத்தைப் பார்க்கிறேன். நான் அந்த அறைக்குள் வந்து ஒரு மணி நேரத்திற்கு மேலாயிற்று.

''கேஸ்...'' என்று இழுக்கிறேன்.

''இதோ எடுத்துக் கொண்டுபோ.. நான் பார்க்கலே. செரியனும் அலிகானும் பார்த்திருக்காங்களே போதும்'' என்று சொல்லி இனிஷியல் போட்டுக் கொடுத்து விட்டார்.

நல்லவேளை. மேலே, மானேஜருக்குப் போகாமல் 'கேஸ் டிஸ்போஸல்' ஆயிற்றே என்கிற சந்தோஷத்துடன் கட்டைத் தூக்கிக் கொண்டு என் இடத்துக்குச் செல்கிறேன்.

## எதிர்காலச் செல்வங்கள்

என் பையன் கணேசன் நான்காம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான்.

கூட்டல் கழித்தல் விரைவில் வருவதற்காகச் சிறிய சாமான்களை அருகிலுள்ள பெட்டிக் கடையில் வாங்கச் சொல்லி அனுப்புவேன். சாமான்களை வாங்கி வந்ததும், கடைக்காரன் மிச்சம் கொடுத்தது சரியா, என்று பார்க்கச் சொல்லுவேன்.

ஒருமுறை அருகிலிருந்த கூட்டுறவுப் பண்டக சாலையில் சாமான் வாங்கி வந்த போது, அவன் கையில் பணம் அதிகமாக மீந்திருந்தது. என்னிடம் ஓடி வந்து சொன்னான். அவன் வாங்கியிருந்த உளுந்தம் பருப்பு பில்லில் இல்லை. ஓடிச் சென்று பில்லைப் பெற்றுக் கொண்டு, பணத்தைக் கொடுத்து விட்டு வந்தான். தான் மிகப்பெரிய காரியம் செய்து விட்டதாக அன்று அவனுக்கு மிகவும் சந்தோஷம். நேர்மைக்கு அன்று அவன் மனத்தில் வித்து விழுந்தது!

- சேது சுப்ரமணியம்.



# அரசமரவேரும் வெள்ளரிப்பழமும்



அருள் வாக்கு

ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள்

‘பூ முதலில் பிஞ்சாகிற போது ஒரே கசப்பாகக் கசக்கிறது. அப்புறம் பிஞ்சு கொஞ்சம் கொஞ்சமாகக் கசப்புக் குறைந்து துவர்ப்பாகிறது; பிற்பாடு நல்ல காயாக ஆகிற போது துவர்ப்பு புளிப்பாகிறது; அதற்கப்புறம் பழுக்கப் பழுக்கப் புளிப்பும் குறைந்து மதுர ரஸம் ஜாஸ்தியாகிக் கொண்டே போய், பூர்ண மதுரமாகக் கனிந்த பிறகு பழம் மரத்திலிருந்தே விடுபட்டு விழுந்து விடுகிறது. இப்படித்தான் மநுஷ்யனும் சின்ன வயஸிலிருந்து காம — க்ரோதாதிக் கசப்பிலிருந்து ஆரம்பித்து படிப்படியாகத்தான் போய்க் கடைசியில் அன்பு என்கிற மதுரத்தில் பூர்ணமாகிறான்: அப்புறம் ஸம்ஸார விருக்ஷத்திலிருந்தே, ஒரு பழுத்த பழம் மரத்திலிருந்து விடுபடுகிற மாதிரி, விடுபட்டு பகவானிடம் சேர்ந்து விடுகிறான்' என்று சொல்வதுண்டு.

இப்படிச் சொன்னால் ஒரு கேள்வி வருகிறது. ‘மரத்திலிருந்து விடுபடுகிற பழம் கீழ் நோக்கித் தானே விழுகிறது? உயர்ந்த ஸ்தானத்தில் கிளையில் தொங்கிக் கொண்டிருந்த பழம் விழுகிறபோது தாழ்ந்த ஸ்தானத்துக்கு வருகிறது. இதுதான் ‘அதோகதி’ என்பது — ‘கீழ் முகமான போக்கு’ என்று அர்த்தம். ஸம்ஸாரத்தில் விழுந்திருப்பதுதான் மநுஷ்யனுக்கு ‘அதோகதி’யாக இருக்கிறது; இதிலிருந்து விடுபட்டு ஈச்வரனிடம் போய்ச் சேருவதற்குப் பழத்தின் ‘அதோகதி’யை உபமானமாகச் சொல்வது பொருத்தமாயில்லையே! ஈச்வரனைச் சேர்வதை ‘உத்தம கதி’ ‘மேல் நிலை’ என்று சொல்லி விட்டுக் கீழே விழுகிற பழத்துக்கு ஒப்பிடலாமா? பதனம் ஆகிறவன் (கீழே விழுகிறவன்) பதிதன் அல்லவா? ஸம்ஸாரத்திலிருந்து விடுபடும் முக்தனைப் போய் இப்படிச் சொல்லலாமா?" என்பது கேள்வி.

இதற்கு க்ருஷ்ண பரமாத்மா ‘கீதை’யில் ஒரு மாதிரி ஸமாதானம் சொல்லியிருக்கிறார். ‘ஸம்ஸாரம் என்பதை ஒரு அரசமரம் என்று வைத்துக் கொண்டால், அதற்கு வேர் மேலே இருக்கிறது. கிளைகள் கீழே இருக்கின்றன: ஊர்த்வ மூலம் அத: சாகம் அச்வத்தம் என்கிறார். ‘அதெப்படி வேர் மேலேயும் கிளை கீழேயும் இருக்கும்?" என்று கேட்டால் (பதில்) சொல்கிறேன்: நம்முடைய பூலோகம் கோளாகாரமாக (உருண்டையாக) தானே இருக்கிறது? அதில் தென் துருவப் பிரதேசத்திலிருக்கின்ற மரங்கள் Northern Hemisphere-ல் (பூமத்ய ரேகைக்கு வடக்கே) இருக்கிற நமக்கு எப்படித் தோன்றுகின்றன? தென் துருவ மரம் தலை கீழாக இருப்பது போல — அதாவது அதன் வேர் மேலே பூமிக்கு உள்ளேயும், கிளைகள் நிலத்துக்கு வெளியிலே வேருக்குக் கீழேயும் வளர்ந்திருக்கின்றன என்றுதானே தோன்றுகிறது? அந்த மரத்தின் கிளையிலிருந்து விழுகிற பழம் பூமியில் போய்ச் சேரும் போது கீழேயிருந்து மேல்நோக்கி, அதாவது அதோகதியாக இல்லாமல் உத்தம கதியாகத்தானே போகிறது? இப்படி ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுகிற முக்தன் ஊர்த்வ முகமாக விழுகிற பழமாகவே பரமாத்மாவை அடைகிறான் என்று (க்ருஷ்ணர்) சொல்லி விட்டார்.

ஆனால் ரொம்பவும் ஸூக்ஷ்மமாக முக்தி நிலையைப் பார்த்தால் முக்தன் கீழே போகிறான் மேலே போகிறான் என்று சொல்கிற எதுவுமே சரியாக இல்லை. "அங்கு இங்கு எனாதபடி எங்கும்," "உள்ளும் புறமும்", "அந்தர் பஹிச்ச தத்ஸர்வம்" என்றெல்லாம் சொல்லியிருப்பதுபோல் எங்கேயும் எப்போதும், இங்கேயே இப்போதே ஸ்வயம் ஸித்தமாக— தன்னிலேயே கிடைப்பதாக - இருக்கிற முக்தி நிலையை அதோகதி, ஊர்த்வ கதி என்று எப்படி வர்ணித்தாலும் பொருத்தமில்லையே என்று கேட்கலாம். இதற்கு, "ருத்ர"த்தில் பதில் இருக்கிறது. அதில் வருகிற த்ரியம்பக மந்திரத்தில், "எனக்கு வெள்ளரிப் பழத்தைப் போன்ற விடுதலை (முக்தி) தா" என்று பிரார்த்தனா ரூபமாகச் சொல்லியிருக்கிறது.

அதென்ன வெள்ளரிப்பழ முக்தி? வெள்ளரிக் கொடியைத் தரையில் தான் படர விடுவார்கள். அதிலே காய் முற்றிப் பழமாகி இற்று விடுபடுகிற போது என்ன நடக்கிறது? பந்தல் போட்டுக் கொடியாகப் படர விட்டால் தானே முற்றிய பழம் கீழே விழ முடியும்? இதுவோ பூமியிலேயே அல்லவா படர்ந்திருக்கிறது? அதனால் முற்றின பழம், தான் கொடியிலிருந்து விடுபட்டு விழுவதில்லை. காம்பு இற்ற பிற்பாடு, கொடிதான் பழத்தைவிட்டு ஓடிப் போய் விடுகிறது! கனிந்த வெள்ளரிப் பழம் மேலேயும் போகாமல், கீழேயும் விழாமல் தான் இருந்த இடத்திலேயே — ஆனாலும் கொடியின் பந்தம் விடுபட்ட மோக்ஷ நிலையில் — இருக்கிறது. ஒரு ஞானிலோக கல்யாணத்துக்காகக் காரியங்கள் பண்ணுகிற மாதிரி நம் பார்வைக்குத் தெரிவது, விடுபட்ட பிறகும் வெள்ளரிப்பழம் கொடியிலேயே இருப்பதாகத் தோன்றுவது போலத்தான்!

# "எந்தப் பதக்கத்துக்கும் நாம் ஏற்றவர்கள் இல்லை" — கமலஹாசன்

'நமக்குத் தங்கப் பதக்கம் கிடைக்கவில்லையே?' என்று பலர் கேட்கிறார்கள். நமக்கு எந்தப் பதக்கமும் கிடைக்காதது சரிதான், நியாயமானதுதான். நாம் பதக்கங்களும் பரிசுகளும் பெறும் அளவுக்குப் படங்களை எடுக்கவில்லை. நம்மை எடுக்க விடுவதும் இல்லை. ரசிகர்களது தேவைகளை, அப்பா அம்மாவைப் போல் தயாரிப்பாளர்களும், விநியோகஸ்தர்களுமே நிர்ணயம் செய்து விடுகிறார்கள்!

தமிழ்ப் பட உலகம் எப்படி இருக்கிறது தெரியுமா? மலச்சிக்கல் வியாதிக் காரனைப் போல் இருக்கிறது. பழசெல்லாம் அப்படியே இருக்கிறது. புதிதாக எதையும் உட்கொள்ள முடியவில்லை. பாலசந்தர் மாதிரி இருக்கும் நம்பிக்கை நட்சத்திரங்களை ''பி'' கிளாஸ் ''சி'' கிளாஸ் என்று கணக்குப் போட்டுப் பார்த்துப் படமெடுக்கின்ற அளவுக்கு உந்தித்தள்ளப் படுகிறார்கள் என்றால் தமிழ்ப் படங்களின் நிலை எப்படி இருக்கிறது என்று நீங்களே புரிந்து கொள்ளலாம்!

இந்த வருடப் பரிசுக்கு ஏழு தமிழ்த் திரைப் படங்கள் சென்றுள்ளன. இவற்றில் நான் நடித்த படங்கள் தாம் அதிகம். அவற்றில் எதுவுமே எந்த ஒரு பரிசும் பெறத் தகுதி உடையது இல்லை. நடிகன் என்ற நிலையில் இல்லாமல் பாரபட்சமற்ற ஒரு விமர்சகன் என்ற முறையில் விமர்சிக்கிறேன். எல்லாப் படங்களையும் அல்ல, நான் நடித்த படங்களை மட்டும்: ''சிகப்பு ரோஜாக்களை'' எடுத்துக்கொள்ளுங்கள். ஆங்கில வாடை உள்ள கதையமைப்பு. மர்மப் பட மன்னன் ஹிட்ச்காக்கின் பாதிப்பு. இதில் பாரதிராஜாவை மட்டும் நான் குறை சொல்லவில்லை. என்னையும் சேர்த்துத்தான் கூறுகிறேன்.

''அவள் அப்படித்தான்'' படம் எடுக்கப்பட்டதில் அவசரம் தெரிகிறது. ஒரு காரணத்துக்காக மன்னித்து விடலாம். படத்தின் ஆரம்பத்திலேயே ''This is only a Rush Print'' என்று கூறிவிடுகிறார்கள். நாமும் பதிலுக்கு ''It is not a full Picture'' என்று சொல்லி விடுகிறோம்.

நான் நடித்த மூன்றாவது படம் பற்றிக் கூறும் போது உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைப்பதாக யாரும் எண்ணக் கூடாது. சொல்ல வேண்டியதை, சொல்லுவதில் நியாயமிருப்பதாக நினைத்துச் சொல்கிறேன்.

அபூர்வ ராகங்களுக்குப் பிறகு 'அவார்டு' வாங்கும் அருகதை உள்ள படங்களை இயக்குனர் பாலசந்தர் உருவாக்க முயற்சிசெய்யக்கூட இல்லை. இது தப்புத் தாளங்களைப் பார்த்து எனக்குத் தோன்றிய கருத்து.

தமிழ்த் திரைப் பட உலகத்தைத் தங்கப் பதக்கங்கள் காப்பாற்றப் போவதில்லை. தேவர் பிலிம்ஸ் படங்களும், தாய்மார்கள் குடும்பத்தோடு பார்க்கக் கூடிய மணங்கவரும் படங்களும் தப்பித் தவறி வெளிவரும் ஓரிரு பதினாறு வயதினிலேக்களும் தாம் தாங்கப் போகின்றன! இந்தப் படங்கள் தங்கப் பதக்கம் பெறும் தகுதியைப் பெறாது. ஆனால் நமக்கும் பதக்கங்கள் கிடைக்கும். எதற்கு? நான் ஒன்றுக்கு வாரம் ஒன்றுக்கு மற்றவர்களைவிட அதிகப் படங்களை வெளியிடுவதற்காகப் பரிசுகளையும் பதக்கங்களையும் பெறலாம். அவ்வளவு படங்கள் வருகின்றன. ஆனால் அதில் ஒன்றாவது...?

என்னைப் போன்ற நடிக, நடிகையர் (நட்சத்திரங்கள்) தரும் ஒளி மட்டும் போதாது. நான் இப்படிச் சொல்வதால் தயாரிப்பாளர்கள் விநியோகஸ்தர்கள் முகம் சுளிக்கலாம். ஆனால் உண்மையைச் சொல்ல நான் என்றுமே தயங்க மாட்டேன்.



# "சுய விமரிசனமா? இருட்டடிப்பா?"

— டைரக்டர் வி. சீனிவாசன்



சுயவிமர்சனம் மனித வளர்ச்சிக்கு அத்யாவசியத் தேவைதான். ஆனால் சுய விமர்சனம் என்ற பெயரால் நமக்கிருக்கும் தகுதிகளை நாமே குறைத்துப் பேசி இழிவு படுத்திக் கொள்ள அவசியமில்லை. அது தற்கொலைக்கு ஒப்பானது.

என் அன்புத் தம்பி கமலஹாசன் அதைத்தான் செய்திருக்கிறார். தமிழ்த் திரை உலகத்தைத் தாக்கிவிடும் உரிமையை கமலஹாசனுக்கு நான் தர மறுக்கிறேன்.

ஆராய்வது அதன் மேல் அபிப்பிராயம் கூறுவது என்பது ஒப்பிட்டுப் பார்த்தலை அடிப்படையாகக் கொண்டது. அவார்டுக்கு அனுப்பப்பட்ட நம் படங்களை கமலஹாசன் பார்த்திருப்பார். ஆனால் அவார்டு கொடுக்கப் பட்ட மற்றைய பிராந்தியப் படங்களையெல்லாம் பார்த்து விட்டாரா கமல்? அவற்றுடன் நம் படங்களை ஒப்பிட்டாரா? எந்த அம்சத்தில் அந்தப் படங்களை விட நம் படங்கள் குறைந்து போய் விட்டன என்று சிந்தித்து முடிவுக்கு வந்தாரா?

உதாரணமாக தகுதி பெற்ற "நிம்மஞ்சன" துக்கும் தகுதி பெறாத "குடிசை"க்கும் உள்ள ஏற்றத் தாழ்வுகளைக் கணித்து விட்டு பேசுகிறாரா? "ஜுனூன்" – "அவன் அப்படித்தான்" ஆகியவை அவரால் ஒப்பிட்டுப் பார்க்கப் பட்டனவா? எந்த அளவுகோலின் அடிப்படையில் 'அவன் அப்படித்தான்' குறைந்து போய்விட்டது என்று அவரால் துல்லியமாகப் புத்தி பூர்வமாக வாதிக்க முடியுமா?

ஒரு விஷயம் தெரியுமா கமலுக்கு? இந்த அவார்டுகளைப் பற்றி மத்திய அமைச்சர் அத்வானியே ஓர் அபிப்பிராயம் கூறியுள்ளதாகப் பத்திரிகைச் செய்தி படித்தேன்.

"அவார்டு கமிட்டியினர் மிக உயர்ந்த தர நிர்ணயங்களை வைத்துக் கொண்டு விட்டார்கள். நானே ஜூரராக இருந்தால் கூட அந்தத் தர நிர்ணயத்தை வைத்துக் கொண்டிருக்க மாட்டேன்" என்று கூறினாராம். அவர்களே தர நிர்ணயம் பற்றிய குழப்பத்தில் இருக்கும் போது என் தம்பி அதைவிட உயர்ந்த தரத்தை மனத்தில் வைத்துக் கொண்டு பேசுவது சரிதானா?

தமிழ்ப் படத்துக்குத் தகுதி இல்லை என்கிறார். இந்த ஆண்டு தங்க மயில் பரிசு யாருக்குமே கிடைக்க வில்லை. அவர் வாதப்படி பார்த்தால் இந்தியாவில் யாருக்குமே நல்ல படம் எடுக்கத் தெரியவில்லை என்றுதானே பொருள்? இந்தியத் திரைப்படத் துறையில் உள்ள எல்லோரையும் பற்றி ஒட்டு மொத்தமாக ஒரு அபிப்பிராயம் சொல்வது அளவுக்கு மீறிய செயல் இல்லையா?

இந்த ஆண்டு அவார்டுக்கு அனுப்பப்பட்ட படங்களில் சிலவற்றை நான் பார்த்தேன். ஒன்று "குடிசை"; மற்றொன்று "அவன் அப்படித்தான்". வாதத்துக்காகக் கூறவில்லை. சத்தியமாக மனத்தில் பட்டதைச் சொல்கிறேன். நான் மட்டும் ஜூரர் கமிட்டியில் இருந்திருந்தால் இந்த இரண்டு படங்களின் பெருமைகளையும் அவார்டு கமிட்டி ஜூரர்களுக்கு நன்றாகப் புரியும் அளவுக்கு விளக்கிச் சொல்லி விவாதித்துத் தமிழ்ப் படங்களுக்கு உண்டான நியாயமான மரியாதையை வாங்கிக் கொடுத்திருப்பேன். இந்த ஆண்டு தமிழ்ப் படத்துக்குப் பரிசு கிடைக்காமல் போனதற்குக் காரணம் நம்முடைய படங்களின் சிறப்புகள் ஜூரர்களுக்குச் சரியாக விளக்கப்படவில்லை என்பதுதான். பரிசுபெற நமக்குத் தகுதியில்லை என்பது தவறு எனில் நம் படங்களின் சிறப்புக்கள் மறைக்கப் படுவது அதைவிடப் பெரிய தவறு!

கடந்த மூன்று ஆண்டுகளாகத் தமிழ்ப்பட உலகில் ஒருமாற்றம் தெரிகிறது. வியாபார நோக்கத்தோடு எடுக்கப்படும் படங்கள் ஒருபுறம் பெருமளவில் தயாரிக்கப் பட்டு வருகின்றன... அதோடு கலை, இலக்கிய, தொழில் நுட்பங்கள் நிறைந்த — Art, Semi Art, Idealistic, Realistic படங்களும் தயாரிக்கப்பட்டுத் தமிழ் ரசிகர்களின் ஆதரவைப் பெற்றுக் கொண்டு வருகின்றன.

மேலும் உழைப்போம், மேலும் வளர்வோம் என்ற உந்துதலுக்காக வேண்டுமானால் கமலஹாசனின் கூற்றை ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் இந்த ஆண்டு தமிழ்ப் படங்களுக்கு எந்த மரியாதையும் அளிக்கப் படவில்லை என்பதை நாம் சந்தோஷத்தோடு ஏற்றுக் கொள்ள முடியாது.

பேட்டி: அசோக் குமார்

மக்கள் மானப் போர்வை-
அது கைத்தறி நெசவு ஆடை!-
அதில் எத்தனை வகைகள்
எத்தனை நிறங்கள்!
அத்தனையும்
காண வருவீர்-
வாங்கி சித்திரக் கோலம்
கொண்டிடுவீர்!

வருக! வருக!!

# வெள்ளிவிழா கைத்தறிக் கண்காட்சி

பாந்தியன் சாலை,
எழும்பூர், சென்னை-8



கோ-ஆப்டெக்ஸ்
கைத்தறி




சிறப்புத் தள்ளுபடி **20%**

5-5-1979 வரை.

# ரசிகர்களின் கடிதங்கள்! —கடுகு

''எழுத்தாளர் ஏகாம்பரத்துக்கு எத்தனையோ ரசிகர்கள் இருப்பார்கள். அவர்கள், அவருக்கு நிறைய கடிதங்கள் எழுதுவார்கள். ஏன், இக்கடிதங்களை எல்லாம் தொகுத்து வெளியிடக் கூடாது?'' என்ற எண்ணத்துடன் அவரைச் சந்தித்தேன். ரசிகர் கடிதங்களை ''எல்லாம் கட்டுக் கட்டாகக் கிடக்கின்றன. நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று கூறி ஒரு பெட்டியைக் கவிழ்த்தார். அந்தக் கட்டுக்களிலிருந்து சில சுவையான கடிதங்களை இங்கு தருகிறேன்.

''தாங்கள் எழுதிய ''யாழிசை வல்லபியின் காதல்'' என்ற தங்கள் கதையை நேற்றிரவு படித்தேன். இந்தக் கதையை எழுதிய உங்களுக்கு என் மனமார்ந்த நன்றி. கடந்த பத்து மாதங்களாக இன்சோம்னியா (தூக்கமின்மை) நோயால் வாடும் எனக்கு, எத்தனையோ மாத்திரைகளும் மருந்துகளும் சாப்பிட்டும் தூக்கம் வராது கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் எனக்குத் தங்கள் கதை வரப்பிரசாதமாக இருந்தது. பாதி படிக்கு முன்பே, அதன் அபார அறுவைத்திறன் காரணமாகத் தூக்கம் கண்களைச் சுழற்றிக் கொண்டு வந்தது! நன்றி!''

''தாங்களே எழுதித் தாங்களே வெளியிட்ட தமிழ் மொழியின் தொன்மையும், வன்மையும் என்ற புத்தகத்தைச் சமீபத்தில் படித்தேன். திருவள்ளுவரைப் பற்றிய அத்தியாயத்தில் உங்கள் திறமையைக் கண்டேன். வள்ளுவருக்கு உங்களைப் போல் யாரும் பெருமை சேர்த்திருக்க முடியாது. அவர் எழுதிய 1330 குறள்களைத் தவிர இதுவரை யாருக்கும் தெரியாத வேறு பல குறள்களைக் கண்டுபிடித்து வெளியிட்டதற்காகத் தமிழுலகம் தங்களுக்கு நன்றிக் கடன்பட்டிருக்கிறது. ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' ''தனி ஒருவனுக்கு உணவில்லையெனில் ஜகத்தினை அழித்திடுவோம்'' ''கருங்கடல் பள்ளியில் கல்வி நீங்கிப் போய்ப் பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ'' ''வந்தவர் எல்லாம் தங்கிவிட்டால் இந்த மண்ணில் இடமேது'' போன்ற அரிய குறள்களை நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். இப்புத்தகத்துக்கு அகாடமி அவார்டு கிடைக்காவிடில் ஆச்சரியப் பட மாட்டேன். அவர்களுக்குத் திருக்குறள் அறிவு போதாது.''

தாங்கள் எழுதிவரும் ''எங்கே ஆப்பிரிக்கன்?'' என்ற கதையைத் தொடர்ந்து படிக்க முடியவில்லை. கதை எந்த இதழில் முடிகிறதோ அதற்கு அடுத்த இதழில் என் கீழ்க்கண்ட கடிதத்தைப் பிரசுரிக்கவும்.

''எழுத்தாளர் ஏகாம்பரம் எழுதிய ''எங்கே ஆப்பிரிக்கன்'' என்ற கதையை ஒரு வாரம் விடாமல் ஒரு வரி விடாமல் படித்து ரசித்தேன். கதை 92 வாரங்களிலேயே முடிந்து விட்டது பற்றி வருத்தம். அவரது அடுத்த கதையை விரைவில் எதிர்பார்க்கிறேன்.

('92' என்பதைத் தக்கபடி மாற்றி விடவும்)

ஹெஹ்ஹேஹ... ஹெழுத்தாளர் ஹேகாம்பரம் அவர்களே... ஹைஹ்யோ ஹைஹ்யோ... வயிற்று வலி தாங்கவில்லை. உங்கள் கட்டுரையில் புதுப் புது ஜோக்குகளை என்னமாய் அள்ளி விடுகிறீர்கள். இரண்டு செவிடர்கள் பேசும் ஜோக் (''என்ன கடைக்குப் போகிறீர்களா?'' ''இல்லே, கடைக்குப் போகிறேன்''. ''ஓஹோ, கடைக்கும் போகிறீர்களாக்கும் என்று நினைத்தேன்!) மாதிரி எத்தனை சிரிப்பு வெடிகளை வீசுகிறீர்கள்!''

அன்புல்ல யெளுத்தாலர் யேகாம்பரம் அவற்களுக்கு, எளுத்து சீர்திருத்தம் பட்றி நீன்கல் எள்திய கட்டுறை மிகப் பிரமாதம். இலக்கன சுத்தமாகவும் தமிள் மொளியின் சறித்திற றீதியாகவும் தெளிவாகவும் எள்தி இருக்கிரீர்கள். உன்கலைப் போன்ற சிறந்த அறிவாலிகளின் கட்டுறைக்களைப் படித்து இன்று நான் இலக்கனப் புலவனாகி உல்லேன் என்று தெறிவித்துக் கொல்கிறேன்.

நீங்கள் எழுதிய 'சிறுவர் ராமாயணம்' 'சிறுவர் மகாபாரதம்' என்ற இரண்டு புத்தகங்களை ''6 சோப் வாங்கினால் 2 புத்தகம் இலவசம்'' என்ற இலவசப் பரிசுத் திட்டத்தின் கீழ் வாங்கினேன். இதைப் படித்த என் பையன் மிகவும் பாராட்டுகிறான். சீதையைப் பீமன் அபகரிக்க வந்தபோது மாயமானாக லட்சுமணன் வந்த பகுதியில் உங்கள் எழுத்து வன்மையையும் கற்பனைத் திறனையும் கண்டதாகச் சொன்னான்...

# வெண்மை ஒளிவீசிப்
# பளிச்சிடும்
# பார்த்தவரெல்லாம் கூறுவர்...

இது

**டெட்**

டிடர்ஜென்ட்
கட்டியின்
சலவை




Shilpi DM 35A/78 Tam

# 35 ஆண்டுகள்

## கண்ணதாசன் பக்கம்

**1944**-ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் எனது முதற் கவிதை பிரசுரமாயிற்று. இந்த ஏப்ரலோடு என் எழுத்துக்கு முப்பத்தைந்து வயது முடிகிறது.

நினைத்துப் பார்த்தால், இப்படி வயதாகி விட்டது சங்கடமாகத்தான் இருக்கிறது.

நான் பிறந்த சிறு கூடற்பட்டி கிராமத்தில் கண்மாய்க் கரைகளில் ஓடி ஆடித் திரிந்த காலங்கள் இன்னும் என் மனத்தை விட்டு நீங்கவில்லை.

இளம் பருவத்துக் காதல் நினைவுகள் இன்னும் பசுமையாகவே இருக்கின்றன.

மனோ பாவத்திலும், ஏன்,' உடல் நிலையிலும் கூட எனக்கு இன்னும் வயதாகி விடவில்லை. ஆனால் வருஷங்கள் ஓடியிருப்பதை அடிச் சுவடுகள் காட்டுகின்றன.

'கண்ணதாசன்' என்ற புனைபெயரைச் சூட்டிக் கொண்டு, 'காலைக் குளித்தெழுந்து' என்று முதற் கவிதை எழும்பொழுது என் உடம்பிலிருந்த வேகம், வெறி அனைத்தையும் இப்போது எண்ணிப் பார்க்கிறேன்.

அப்போது சமஸ்தானமாக இருந்தது, புதுக்கோட்டை மாவட்டம். அதிலே 'சுடியா பட்டி' (இராமச் சந்திரபுரம்) என்றொரு ஊர். இருப்பது இருநூறு வீடுகளானாலும், இருநூறும் அரண்மனைகள். அருமையான கிராமம், அற்புதமான காற்றோட்டம்.

பதினேழு வயது இளைஞன் ஒருவன் அங்கே தான் பத்திரிகை ஆசிரியனாக அறிமுகமானான். முகத்தில் ரோமம் முளைக்கத் துவங்கிய பருவத்திலேயே அவனுக்கு எழுத்தில் ஆசை பிறந்தது. அப்படியே பல மைல் கற்களைத் தாண்டி இப்போது ஏதோவோர் இடத்தில் வந்து நிற்கிறான்.

'நீங்கள் எழுதியது பிரமாதம்' என்று பலர் சொல்லும்போது, தான் படிக்க வசதி இல்லாமல் திண்டாடிய காலங்களை அவன் எண்ணிப் பார்க்கிறான்.

பற்றாக் குறைக் கல்வியிலேயே அவனுக்கு முற்ற முழுக்க ஒரு ஞானம் கிடைத்துவிட்டதா? எப்படி?

அது அவனது திறமையல்ல. அவனை ஈன்றெடுத்த தாயின் பெருமை. சிறு கூடற்பட்டியிலே இன்னும் ஒரு குடிசையில் வாழ்ந்து கொண்டிருக்கும் மலையரசியின் மகிமை. ஈன்றெடுத்த ஆத்தாளும், தெய்வீக ஆத்தாளும் அருளிய வரங்கள்.



ஒன்றும் புரியாமல் ஊரை விட்டுப் புறப்பட்டவனுக்கு, இப்போது எல்லாம் புரிகிறதென்றால், அதற்குச் சொந்த அறிவு காரணமாக இருக்க முடியாது. 'அருள்' என்பார்கள், 'வரம்' என்பார்கள்; 'பூர்வஜன்மபலன்' என்பார்கள்; ஏதோ ஒன்று.

காலங்கள் ஓடி விட்டன. ஆனால் அவை தன் முத்திரையை என்மீது நன்றாகப் பதித்திருக்கின்றன.

'கவியரசர் தமிழ் நாட்டுக்கில்லை என்னும் வசை என்னால் கழிந்தது இன்று' என்றான் பாரதி. ஏதோ அவனது நிழலில் என்னையும் ஒண்டிக் கொள்ள வைத்தது தெய்வம்.

பெற்றவள், நினைத்தாளா, பிள்ளை இப்படி வளருவான் என்று!

ஊரிலே மற்றவர்கள் நினைத்தார்களா, இந்த மடையனுக்கும் இப்படி வரம் கிடைக்கும் என்று?

கற்றது கைமண்ணளவு; கல்லாதது உலகளவு; பெற்றதோ பெரிய புகழ்; காரணமாக யாரைக் குறிப்பிடுவது?

இதற்குத் தெய்வத்தையன்றிக் காரணம் சொல்ல நாத்திகனாலும் முடியாது.

சில சரித்திரநாயகர்களைப்போலவே நானும் கடவுளை நம்புவதில் அர்த்தம் இருக்கிறது.

என் அன்னையின் இடையறாத தெய்வபக்தியே என்னை உருப்பட வைத்தது. ஆனால் இதற்கிடையிலும் எனக்குக் கண்ணீர் பெருக்கெடுக்கிறது.

இந்த முப்பத்தைந்து ஆண்டுகளில் பல காலங்களை நான் வீணாக்கி விட்டேன். கடந்த இரண்டு ஆண்டுகளில் எழுத்திலே தோன்றிய வெறி, முன்பே தோன்றியிருக்குமானால், எவ்வளவோ சாதித்திருப்பேன். பயனற்ற விஷயங்களில் காலம் வீணாகிவிட்டது.

ஒரு கற்பனை, 'உடோபியா,' கம்ப சித்திரம் போல் ஒரு சித்திரம்... அப்பப்பா! எவ்வளவு எண்ணினேன்; எண்ணினேன்!

எனக்கு அளவில்லாமல் கொடுக்க ஈசுவரன் விரும்பவில்லை; அளந்து கொடுத்து விட்டான். ஆனாலும் தமிழ் இலக்கிய வரலாற்றில் என் பெயரைச் சேர்த்துக் கொடுத்த தெய்வத்துக்கு நன்றி சொல்ல வேண்டிய நேரமல்லவா இது.

## அத்தியாயம் 32

**கா**லை மணி பத்து. நித்யா, மானேஜிங் டைரக்டரின் அறைக்குப் பக்கத்தில் போடப் பட்டிருந்த தன் மேஜைக்கு முன் வந்து அமர்ந்தாள். ஏ. ஸி. செய்யப்பட்டிருந்த அந்த அறையில் சத்யாவைக் காண வருகிற வர்கள் அமரச் சில வசதியான நவீன நாற் காலிகள் இருந்தன. சுவரை ஓரிரு மாடர்ன் ஓவியங்கள் அலங்கரித்தன.

அவளது கைப்பையைத் திறந்து ஸ்பெஷியல் காம்பேக்ட் எடுத்து அதிலுள்ள கண்ணாடியில் முகம் பார்த்தபடியே லிப்ஸ்டிக்கைச் சரி செய்து கொண்டாள் நித்யா. சத்யா வேகமாக உள்ளே வந்து அவளைக் கடந்து சென்று தன் தனி அறைக்குள் நுழைந்தான். அவள் காம் பேக்டை மூடி வைத்து விட்டு அவனைப் பின் தொடர்ந்தாள்.

கழுத்தில் டையைத் தளர்த்திய படியே, ''நித்யா வில் யூ போர் மீ எ டிரிங்க்?'' என்று கேட்டான் சத்யா.

நித்யா திடுக்கிட்டாள். ''என்ன ஸார் இது? ஆனந்தோடு சேர்ந்து பழகி நீங்க சத் யாங்கிறதே மறந்து போச்சா? ஆனந் தாகவே உங்களைப் பாவிச்சுக்கிட்டீங்களா? காலங்கார்த்தாலே வந்ததும் வராததுமா விஸ்கி கேக்கறீங்களே? அடிப்படையிலே நீங்க ரொம்ப நல்லவர் என்று நான் புரிஞ்சுக்கிட் டிருக்கேன். உங்களை நீங்களே கெடுத்துக்கா தீங்க!'' என்றாள்.

''நான்சென்ஸ்! உன் உபதேசத்தை யார் கேட்டது? உனக்கு ஊற்றிக் கொடுக்க இஷ்ட மில்லேன்னு நானே எடுத்துச் சாப்பிட்டுக் கிறேன்'' என்று கூறி மினி பார் இருந்த பக்கம் நகர்ந்தான் சத்யா.

''வேண்டாம் ஸார்! நானே எடுத்துத் தரேன். உங்களுக்கு அளவு கூடத் தெரியாது. அதிகமாப் போயிடும்'' என்ற நித்யா, விஸ்கி யும் சோடாவும் கலந்து கொண்டு வந்தாள். அதை வாங்கி 'ஸிப்' பண்ணி வைத்தான் சத்யா.

இந்தச் சமயம் முன்னறிவிப்பு ஏதுமின்றி அறைக் கதவு திறந்துகொள்ளப் புயலாக நுழைந்தாள் பிரமீளா. கையோடு கொண்டு வந்திருந்த காகித உறையைப் பிரித்து அதி லிருந்து புகைப்படங்கள் பலவற்றை எடுத்து அவன் மேஜை மீது வெறுப் புடன் வீசிப் போட்டாள். உள்ளே நடப்பனவற்றை உணர்ந்து கொள்ளக் கூட வேண்டாம் என பதுபோல் அறைக் கதவு மீண்டும் தன்னுள் மூடிக் கொண்டது. ''உங்களைப் பற்றிய சில உண்மைகளை ஆனந்த் என்னிடமும் அப்பா அம்மாவிடமும் சொன்னார். அநாதை ஆசிரமத்திலிருந்து உங்க அப்பா உங்களை எடுத்து வந்து வளர்த்ததாகக் கூறினார். என் அப்பாவும் அம்மாவும் நீங்கள் என்ன மதமோ, ஜாதியோ, கல்யாணமான வர்களுக்குப் பிறந்தீர்களோ, இல்லையோ என்றெல்லாம் எண்ணி அருவருப்படைந் தார்கள். ஆனால் நான் உங்களை வெறுக் கல்லே. பிறப்பிலே ஏற்றத் தாழ்வு கிடை யாது என்று நம்பினேன். என் காதலில் உறுதியாக இருந்தேன். . பெற்றோரிடம் வாதாடினேன். போராடினேன். ஆனால் இப்போ... இப்போ... இந்தப் படங்களைப் பார்த்த பிறகு நீங்க மனுஷ ஜாதியே இல்லே, மிருக ஜாதி என்ற முடிவுக்கு வந்து விட் டேன்! உங்களை வெறுக்கிறேன். எவ்வளவுக்கு எவ்வளவு உங்கள் மீது அன்பு வைத்திருந் தேனோ அவ்வளவுக்கு அவ்வளவு இப்போ உங்களை வெறுக்கிறேன், வெறுக்கிறேன், வெறுக்கிறேன்!''

எதைச் சொல்ல வேண்டும் என்று தயார் செய்து கொண்டு வந்தாளோ அதைப் பட படவென்று பொரிந்து தள்ளிய பிறகு அவள் உடம்பெல்லாம் நடுங்கியது. எதையாவது கைத்தாங்கலாகப் பிடித்துக் கொள்ள வேண் டும் போல் இருந்தது. ஆனால் அந்த அறையில் எதையும் தொடுவதற்குக் கூட அருவருப் பாக இருந்தது அவளுக்கு.

சத்யா அமைதியாக இன்னொரு மடக்கு விஸ்கியை விழுங்கி விட்டுக் கூறினான்:

''சரி, என்னை நீ வெறுக்கிறாய். அதைச் சொல்லித் தீர்த்தாகி விட்டதல்லவா? இனி நீ வந்த வழியைப் பார்த்துப் போகலாமே?''

''இவ்வளவுதானா?'' என்று ஓர் அற்பப் பொருளைப் பார்ப்பது போல் அவனை நோக்கிக் கேட்டாள் பிரமீளா. ''இவ்வளவுதான் எனக்குப் பதிலாகக் கூற முடியுமா உங்க ளால்?'' ஏதோ நியாயமானதொரு விளக் கத்தைப் பெற்று விட முடியும் என்று மனத் தின் ஒரு மூலையில் அவளுக்கு ஓர் ஆசை

நீ ந ஜனகள்



இருந்து வந்ததோ? அதுவும் இப்போது நிராசையாகி விட்டதோ? என்று எண்ணும்படி குரலில் ஏமாற்றம் தொனித்தது.

''நான் வேறு என்ன சொல்ல முடியும்?'' என்று கேட்டான் சத்யா. ''நீ என்னை வெறுப்பதாகச் சொன்னாய். ஆனால் நீ என்னை வெறுப்பதை விட என்னை நானே அதிகமாக வெறுத்துக் கொள்கிறேன் என்று நான் சொன்னால் அதற்காக உன் இதயம் அழப் போகிறதா? பிங்கி! உன்னிடம் பொய் சொல்லி நான் தப்பிக்கவா முடியும்? படங்களே உன் எதிரே சாட்சியங்களாக இருக்கின்றனவே! 'நடந்ததற்காக வருத்தப்படுகிறேன். நீயும் ஒரு துர்ச்சொப்பனமாக இதையெல்லாம் மறந்து விடு' என்று நான் சொல்லியும் பிரயோஜனமில்லை. நீ அதை ஏற்கப் போவதில்லை. ஆக, நாம் மேற்கொண்டு பேச என்ன இருக்கிறது?''

திடீரென்று பிரமீளா விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள். அவளை ஆசுவாசப்படுத்த எண்ணி நித்யா நெருங்கினாள். ''என்னைத் தொடாதே'' என்று விசும்பலினூடே சீறினாள் பிரமீளா. ஏதோ தொற்றுநோய் உள்ளவளிடமிருந்து விலகுவது போல் அருவருப்புடன் ஒதுங்கிக் கொண்டாள். பிறகு சத்யாவைப் பார்த்து, ''இந்தப் படங்கள் என் கைக்கு வந்ததுமே கிழித்து நெருப்பில் போட எண்ணினேன். அப்புறம் எப்படியும் உங்களைப் பார்த்து ஒரு வார்த்தை கேட்டு விட வேண்டும் என்று தோன்றியது. கேட்டு விட்டேன். வருகிறேன். உங்க இரண்டு பேருக்குமே கும்பிடு!'' கையைத் தட்டிக் கும்பிட்டுவிட்டுத் திரும்பினாள் பிரமீளா.

''இந்தப் படங்கள்?'' என்று கேட்டான் சத்யா. ''நெருப்பில் போட எடுத்துப் போக வேண்டாமா?''

''வேண்டாம். இந்த பெட்ரும் காட்சிகளை நெருப்பில் போட வேண்டாம். நீங்கள் ஃபிரேம்

கீ.ராஜேந்திரன்



போட்டு மாட்டிக் கொள்ளுங்கள். தனியே உங்களுடைய படம் ஒன்றை ஃபிரேம் போட்டு வீட்டில் மேஜை மேல் வைத்து மனத்தால் பூஜித்து வந்திருக்கிறேனே. அதை உடைத்தெடுத்துக் கிழித்து நெருப்பிலிட்டுக் கொளுத்திக் கொள்ளுகிறேன்'' என்று ஆத்திரத்துடன் மொழிந்தவள் கைக்குட்டையால் கண்களை ஒற்றிக் கொண்டு வெளியேறினாள்.

விஸ்கி கிளாஸைக் கையிலெடுத்தபடி அலட்சியமாகத் தோள்களைக் குலுக்கினான் சத்யா. 'தலைக்கு மேல் வெள்ளம் போயாச்சு. அது சாண் ஆனால் என்ன முழம் ஆனால் என்ன?' என்ற அலட்சிய பாவம் அவன் தோற்றத்தில் தெரிந்தது.

''ஐ ஆம் ஸாரி'' என்றாள் நித்யா.

''நீ எதற்கு வருத்தப்பட வேண்டும் நித்யா?'' என்று அவன் கேட்டான். ''உன்னைப் பரிதாபத்துக்குரியவள்னு நான் பல சமயம் நினைத்ததுண்டு. ஆனால் அது தப்பு. நான் தான் பரிதாபத்துக்குரியவன் என்று இப்போ புரிஞ்சுக்கிட்டிருக்கேன். ஏன் தெரியுமா? நீ கால் கேர்ல்தான் என்றாலும் அதை நீ ஒப்புத்துக்கிட்டே. 'நமக்கு இதுதான் வாழ்வு'ன்னு ஏற்றுக்கிட்டே. உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ளலை. அதனாலே உன் வாழ்வில் சந்தோஷம் ரொம்ப இல்லேன்னாலும் சிக்கல் இல்லே. உன்னிடம் எது எதிர்பார்க்கப்படுகிறதோ அதை நிறைவேற்றி வைச்சுட்டே. ஆனால் நான்? பெரிய மனுஷன் வீட்டுப் பிள்ளை, பெரிய இடத்தில் சம்பந்தம் பண்ணிக்கப் போகிற மாப்பிள்ளை, பெரிய உத்தியோகம் என்றெல்லாம் என்னைப் பற்றியே பெருமையா நினைச்சுக்கிட்டேன். ஆனா அதற்குத் தகுந்தாற் போலக் கௌரவமா நடந்துக்கத் தெரியலை. நீ ஆனந்த் விருப்பப்படி எனக்கு வலை வீசினா என்ன? நான் அதில் சிக்காமல் இருந்திருக்கலாம் இல்லையா? அந்த அளவுக்கு மனோதைரியம் இல்லை எனக்கு. அதே மாதிரிதான் ஒவ்வொரு விஷயத்திலும். நேர்மைக்கும் நியாயத்துக்கும் துணிஞ்சு நிற்காமல் சகலத்திலும் பலவீனனாயிட்டேன். அதனால் பரிதாபத்துக்குரியவன் நான்தான்.''

''உங்களை நீங்களே ரொம்ப வருத்திக் கொள்றீங்க'' என்றாள் நித்யா.

''என்னை நானே வருத்திக் கொள்றேனா? மற்றவங்க என்னைக் கஷ்டப் படுத்தறதை விடவா? நீ என்ன உளறுகிறே நித்யா? யோசிச்சுப் பாரு! என் அப்பா என்னைத் தம் பிள்ளை இல்லேன்னு சொல்லிட்டார், பிங்கி கோபப்பட்டு என்னிடம் கொண்டிருந்த காதலை முறிச்சுக்கிட்டுப் போயிட்டா. அத்யந்த நண்பனாக நான் எண்ணிய ஆனந்த் என்னை ஏமாற்றியதோடு என் காதலியிடம் என்னைப்பற்றிப் பழித்துப்பேசி இந்த ஆபாசப் படங்களைக் கொடுத்திருக்கான். என்னை அவள் வெறுக்கும் போது அவளைத் தன் வயப் படுத்திக் கொள்ளலாம் என்றும் எண்ணியிருக்கான். இன்னும் கேட்டால், யூனியன் தலைவர் என்னிடம் ஏராளமா பணம் வாங்கிக்கிட்டு இப்போ தொழிலாளரை எதிர்த்துக்கவும் திராணியின்றி வேலை நிறுத்தத்துக்கு ஆதரவு தந்திருக்கிறார். இத்தனை பேர் தரும் இவ்வளவு கஷ்டங்களை நான் தாங்கிக்கிட்டிருக்கும் போது நீ என்னடான்னு என்னை நானே வருத்திக்கறேன் என்கிறே! சரி... இந்த கிளாஸை நிரப்பிக்கிட்டு வா!''

''என்ன ஸார் இது? போதும் ஸார்!''

''நித்யா!'' என்று அழைத்தான் சத்யா. ''சைத்தான் வேதம் ஓதக்கூடாது என்பாங்க. அதுவே தப்புன்னா ஒரு சைத்தான் இன்னொரு சைத்தானிடம் வேதம் ஓதுவது அதைவிடப் பெரிய தப்பு! இன்னொரு டிரிங்க் கொடு! ஸ்ட்ராங்கா இருக்கட்டும்.''

நித்யா கலந்து கொடுத்ததை இரண்டு மிடறு விழுங்கிய பிறகு ஒரு பெருமூச்சுடன் நாற்காலியில் பின்னுக்குச் சாய்ந்தான் சத்யா. கதவு தட்டப்படும் ஓசை கேட்டது. ''மே ஐ கம் இன்?'' என்று அருள்ராஜின் குரல் கேட்டது.

''அருள்ராஜ் வரார் ஸார்'' என்று கூறி மேஜை மீது இருந்த டம்ளரை எடுக்கப் போனாள் நித்யா. அவளைத் தடுத்து மேலும் இரண்டு வாய் குடித்து விட்டுத் தந்தான் சத்யா. அதைக் கொண்டுபோய் காக்டெய்ல் பாருக்குள் வைத்துஅலமாரி கதவை மூடிவிட்டு, மேஜை மீது இருந்த புகைப்படங்களை உறையிலிட்டு மேஜை டிராயருக்குள் வைத்துப் பூட்டிய பிறகு, அறைக் கதவைத் திறந்தாள் நித்யா.

''குட்மார்னிங் பாஸ்!'' என்று வணக்கம் தெரிவித்தபடியே நுழைந்தார் அருள்ராஜ்.

''குட்மார்னிங் அருள்ராஜ்! வாங்க, உங்களுக்கு ஒரு நல்ல சேதி சொல்லணும்னு காத்திருக்கேன்'' என்றான் சத்யா. ''உங்களுக்கு இப்ப என்ன வயசு?''



''ஐம்பத்தி ஆறு ஆகிறது ஸார்! எதுக்குக் கேட்கறீங்க?''

''சொல்றேன். அதாவது இன்னும் இரண்டு வருஷத்திலே நீங்க ரிடையர் ஆகணும். இல்லையா? ஆனா நான் உங்க உடம்பு இருக்கிற மோசமான நிலையை உத்தேசித்து இரண்டு வருஷம் முன்பாகவே உங்களை ரிலீவ் பண்ணலாம்னு முடிவு செய்திருக்கேன். உங்களுக்கோ உடம்பில் சக்தி இல்லே. வேலைச் சுமையைத் தாங்க முடியலே. ஆனா அதுக்காக உங்கள் வயிற்றில் அடிக்கிற மாதிரி நடந்து கொள்ள மாட்டேன். இரண்டு வருஷ சம்பளத்தையும் கொடுத்துத்தான் அனுப்பப் போறேன். எவ்வளவு தாராள மனசு பார்த்தீங்களா எனக்கு?... நித்யா!''

## எதிர்காலச் செல்வங்கள்



என்னுடைய பெண் ஜெயஸ்ரீ மிகவும் சுறுசுறுப்பானவள். எதையும் நன்றாகப் புரிந்து கொண்டு அதற்குக் கேள்விகளும் கேட்டு விளக்கமும் பெறுவாள். அவளுக்கு நான்கு வயதாக இருக்கும் பொழுது வீட்டில் ஒரு பெரியவர் — பெயர் ''குருஜி'' —தினம் கிருஷ்ணனைப் பற்றிய கதைகளையெல்லாம் அவளுக்குச் சொல்வார். அவர் நாம் செய்யும் எந்தக் காரியங்களும் அந்தக் கிருஷ்ண பகவானால் தான் என்று அவளுக்கு அடிக்கடி சொல்வார். ஒருநாள் சாப்பிட ரொம்ப அடம் பிடித்ததால் நான் நன்றாக அடித்து விட்டேன். அவள் அழுது கொண்டே குருஜியிடம் போய் ''நீங்கள்தானே சொன்னீர்கள். நாம் எந்தக் காரியம் செய்தாலும் அது கிருஷ்ணனால் தான் என்று! என்னைச் சாப்பிட வேண்டாம் என்று படுத்தச் சொல்வதும் அந்தக் கிருஷ்ணன்தானே. அதற்கு அம்மா என்னை ஏன் இப்படி அடிக்க வேண்டும்? அந்தக் கிருஷ்ணனைத் தானே அடிக்க வேண்டும்'' என்று கிருஷ்ணன் போட்டோவைக் காட்டிச் சொன்னதும் எங்களையும் மறந்து நாங்கள் எல்லோரும் சிரித்து விட்டோம்.

- லீலா விஜயராகவன்

---

நித்யா அவன் அருகே வந்தாள். ''என்ன ஸார் இது! கொஞ்சம் நிதானிக்க யோசியுங்க'' என்றாள். இப்படி அவனுக்குத் தான் உரிமையுடன் அறிவுரை கூறலாமோ கூடாதோ அதுவும் அருள்ராஜ் எதிரே பேசலாமா என்ற தயக்கங்கள் காரணமாக அவளுக்குக் குரல் நடுங்கியது.

அதை ஏதும் லட்சியம் பண்ணாமல் சத்யா பேசினான்: ''சீஃப் அகௌண்டண்ட் கிட்டே ரிடையர்மெண்ட் ஆர்டர் தயாரித்து என் கையெழுத்துக்குக் கொண்டு வரச் சொல்லு. அருள்ராஜ் இஸ் கோயிங் ஆன் லீவ் பிரியர் டு ரிடையர்மெண்ட் ஃபிரம் டுடே!''

''ஸார்! ரொம்ப பிஸினஸ் லைக்கா பேசறீங்க'' என்றார் அருள்ராஜ். ''நம்மிடையே நிலவுகிற உறவு பாஸ் — ஸர்வண்ட்டுங்கிற ஏற்பாட்டுக்கும் மேம்பட்டது.''

''உறவு, பாசம், அன்பு, காதல் என்கிறதெல்லாம் எனக்கு நம்பிக்கை கிடையாது'' என்றான் சத்யா. ''கொஞ்ச நஞ்சம் இருந்த நம்பிக்கையும் கடந்த சில நாட்களில் பறந்தோடிப் போச்சு!''

''தெரியும் ஸார்! வீட்டிலே நடந்ததையெல்லாம் கேள்விப் பட்டேன். ரொம்ப வருத்தமா யிருந்துச்சு. கொஞ்சநாள் ஆறப் போட்டாச்சு. இனி நான் உங்க அப்பா விடம் பேசறேன். எல்லாம் சரியாயிடும் ஸார்! நம்பிக்கையோடு இருங்க!''

''என்னய்யா நாடகமாடறே!'' என்று சீறினான் சத்யா. ''என்னைப் பற்றி என் அப்பா விடம் வத்தி வெச்சதெல்லாம் உன் மவன் தானே!''

''அதுவும் தெரியும் ஸார்! தீபக்கே என்னிடம் சொல்லி வருத்தப் பட்டுக்கிட்டான்.''

''ஓ! குழந்தையைக் கிள்ளிவிட்டுத் தொட்டிலையும் ஆட்டுகிறானாக்கும்!''

''வைத்தியலிங்கம் ஆணையிட்டுக் கேட்ட போது தன்னால் மௌனம் சாதிக்க முடியலேன்னான். அதனால்தான் இப்ப நான் உங்க கிட்டே வந்து நிற்கிறேன். என் மகன் சார்பிலே மன்னிப்புக் கேட்டுக்கறேன்.''

''உன் மன்னிப்பைக் கொண்டு உடைப்பிலே போடுய்யா! யாருக்கு வேணும் உன் கெஞ்சலும் மிஞ்சலும் கொஞ்சலும்?''

''தம்பி! இப்ப நான் உனக்குக் கீழே வேலை செய்கிறவன்கிற முறையிலே பேச வரலே. சின்னக் குழந்தையா நீ இருந்த நாளிலே யிருந்து உன்னைத் தூக்கி எடுத்து வளர்த்தவன் என்கிற உரிமையோடு கேட்டுக்கறேன். என்னைத் தூக்கி எறிந்து பேசாதே! தயவு செய்து ஐந்தே நிமிஷம் உன் காதையும் மனசையும் எனக்குக் கொடு! உன் அப்பாவுக்கு உன்னிடம் பாசமோ அன்போ இல்லேன்னு முடிவு கட்டாதே! அது தவறான கணிப்பு. கோபத்திலே இத்தனை நாளா கட்டிக் காத்த ரகசியத்தை அவர் உடைச்சுட்டார். அப்படி அவர் நடந்துக்கவும் நீதான் காரணம். ஆனந்த் பேச்சைக் கேட்டுக் கெட்டழியாமல் நீ ஒழுங்கா இந்தக் கம்பெனியை நிர்வாகம் பண்ணியிருந்தால் இப்படியெல்லாம் நடந்திருக்காது...''

''ஷட் அப்!'' என்றான் சத்யா. ''உன் அறிவுரையை இங்கே யாரும் கேட்கலே. பிஸினஸ்ஸை எப்படி நடத்தணும்னு எனக்குத் தெரியும். உனக்குச் சேர வேண்டிய பணத்தை வாங்கிக்கிட்டுக் கிளம்பு சீக்கிரம்! கெட் அவுட்!''

''தம்பி நீ என்னைக் கழுத்தைப் பிடிச்சு வெளியே தள்ளினாலும் சரி, நான் சொல்ல நினைக்கிறதைச் சொல்லிடறேன். அப்புறம் உன் இஷ்டம்'' என்றார் அருள்ராஜ். ''உன் அப்பாவுக்கு ரொம்ப நாளாகக் குழந்தையே பிறக்கலே. மனசு ஒடிஞ்சு போயிருந்த நிலையிலே நான்தான் அனாதை ஆசிரமத்திலிருந்து ஒரு பிள்ளையைத் தத்து எடுத்துக்கலாம் என்று அவருக்கு யோசனை சொன்னேன். அவரும் சம்மதிச்சார். எவ்வளவோ அன்போடு சீரும் சிறப்புமா உன்னை வளர்த்தார். நீ சொந்த மகன் இல்லே என்பதாலேயே உனக்கு அந்த எண்ணம் ஏற்பட்டு விடக் கூடாதென்கிற

# கிரிக்கெட் கற்கலாம்! 33

கோச்: கே. சந்திரசேகர்
படம்: ராஜ்.. தயாரிப்பு: குன்றுமணி

## பின் முதுகு, தோள் பட்டை சதைக ளுக்கான உடல் பயிற்சிகள்.

இந்த உடல் பயிற்சி பின் முதுகு சதை களுக்கு வலுவூட்டும். முதலில் எந்த வித எடைகளையும் தூக்காமல் இந்த உடல் பயிற்சி செய்யுங்கள். கால் முட்டுக்களைச் சரிக்காதீர்கள். ஆனால் பின் முதுகை மட்டுமே சரியுங்கள்.



தோள் பட்டை மட்டும் முன் புறம் பின்புறம் சுற்றிப் பயிற்சி செய்யுங்கள். இந்த உடல் பயிற்சி தோள் பட்டை சதை களுக்கு வலுவூட்டும்.

முழு உடல் எடையும் தோள் பட்டையில் செலுத்தப் பட வேண்டும். கால் முட்டைச் சரிக்காதீர்கள். ஆனால் பின் முதுகு மட்டுமே சரிக்கலாம்.



## 'மெடிஸின்' பந்து உடல் பயிற்சிகள்

(பந்தின் எடை 3லிருந்து 5 கிலோ கிராம் இருக்கலாம்.)



சிறிய இரும்பு எடைகளைக் கைகளில் தூக்கிப் படத்திலுள்ளது போல் பயிற்சி செய்யுங்கள்.



கவலையில் உனக்கு அளவுக்கு அதிகமாக இடம் கொடுத்து வளர்த்தாங்க உன் பெற்றோர். அதுவே தப்பாப் போச்சோன்னு நான் இப்ப நினைக்கிறேன். இப்ப கூட ஒன்றும் குடி முழுகிப் போயிடலே. சுயகௌரவம், பிடிவாதம், வீம்பு எல்லாத்தையும் விட்டுத் தொழிலாளர் தலைவரைக் கூப்பிட்டுப் பேசு. நானும் உடன் இருக்கேன். அவங்க ஒத்துழைப்பை வாங்கித் தரேன். அந்தத் தடியன் ஆனந்தை அருகே அண்ட விடாதே. இதோ இருக்கிற நித்யா வையும் விரட்டி அடி! சந்தேகம் வரப்போ என்னையோ உன் அப்பாவையோ யோசனை கேளு. கம்பெனியைப் பிரமாதமா நடத்திக் காட்டலாம். 'என்னைப் பிள்ளையே இல்லை'ன்னு கோபத்திலே இரைந்த உன் அப்பா, நாளைக்கு 'என் பிள்ளை மாதிரி உண்டா'ன்னு கேட்டுப் பெருமைப் படு வார்!''

''என்னய்யா லெக்சரா அடிக்கறீங்க?'' என்று எரிந்து விழுந்தான் சத்யா. ''போய்யா வெளியே! உடனே இங்கேயிருந்து போறீங் களா, இல்லே கூர்க்காவைக் கூப்பிடவா?''

அருள்ராஜ் வருந்திப் பதறினார். ''நான் வரேன் தம்பி! கூர்க்காவைக் கூப்பிட அவ சியம் இல்லே. நானே போயிடறேன்'' என் றார் நெஞ்சை அடைக்கும் குரலில். தளும்பி நின்ற கண்ணீரை மோதிர விரலால் சுண்டி எறிந்து விட்டு நடந்தார்.

அவர் தலை மறைந்தபோது கைக்குட்டை யால் நெற்றியையும் கழுத்தையும் ஒற்றிக் கொண்டிருந்தான் சத்யா.

''என்ன ஏ. ஸி. வேலை செய்யலியா? இப்படி வியர்த்துக் கொட்டுதே?'' என்றாள்.

''அதற்குக் காரணம் உங்க மனச்சாட்சி உங்களை வருத்துவதுதான்'' என்றாள் நித்யா. ''ஏஸி சரியாத்தான் இருக்கு.''

இச்சமயத்தில் இண்டர்காம் பஸ்ஸர் ஒலிக் கவே ரிஸீவரை எடுத்து, ''எஸ்?'' என்று கேட்டாள் நித்யா. ''யாரு? யூனியன் தலைவர் காளமேகமா பார்க்கணும்கிறார்? பாஸ் பிஸியா இருக்கார். அவரை உட்காரச் சொல்லிக் காப்பி கொடுங்க.''

கருவியை வைத்து விட்டு நிமிர்ந்தாள் அவள். ''மைகாட்'' என்று தலையை இரு கரங்களாலும் பற்றிக் கொண்டான் சத்யா. ''அருள்ராஜ் போய்ச் சேர்ந்தான். காள மேகம் வந்துட்டானா? வேர் இஸ் தட் டிரிங்க்?''

''ஸார்! தயவுசெய்து மேலும் டிரிங்க் பண்ண வேணாம். சாப்பிட்டது போதும். யூ ஆர் டேக்கிங் ராங் டிஸிஷன்ஸ் பிகாஸ் ஆஃப் தட்!'' என்றாள் நித்யா.

''அசடே! டிரிங்க் சாப்பிட்டதால் தவறான முடிவுகள் எடுக்கலே! இந்தத் தவறான முடிவு களை எடுக்கிறதா முன் கூட்டியே தீர்மானிச்சு, அதை நிறைவேற்றத் தைரியத்தை வரவழைச் சுக்கத்தான் குடிக்கிறேன். புரியுதா?''

''புரியலே'' என்றாள் நித்யா.

''புரியலையா? யூனியன் தலைவரை வரச் சொல்லு. நாங்க பேசிக்கிறதைக் கேளு. புரி யும்!'' என்றான் சத்யா. (தொடரும்)

"தமிழுக்கு அமுதென்று பேர், அந்தத் தமிழ் இன்பத் தமிழ், எங்கள் உயிருக்கு நேர்" இந்தப் பாடல் வானொலியில் வரும்போது வழக்கமான சினிமாப் பாட்டுக்கு மாறுதலாக இருக்கிறதே என்று வியக்கத் தோன்றுவது சகஜம். புரட்சிக் கவிஞரது பாடல் என்று தெரிந்தால் வியப்பதற்கு இடமிராது. தமிழுக்கு எழுச்சி, விறுவிறுப்பு, வேகம், இவைகளை ஊட்டிப் புரட்சிக் கருத்துக்களைச் சேர்த்து உணர்வை ஏற்படுத்தியவர் பாரதிதாசன்.

அவர் தமது மதிப்பிற்குரிய ஆசானாக கவி சுப்பிரமணிய பாரதியாரைக் கொண்டிருந்ததால், "பாரதி தாசன்" என்ற பெயரையே பெருமையுடன் வைத்துக் கொண்டிருந்தார். அது அவரது இயற்பெயரையே மறைத்து விட்டது. சீர்திருத்த வாதியான, சுயமரியாதைக்காரரான கவிஞரை, இது பற்றி மறைவாகவும் வெளிப்படையாகவும் விமர்சித்தவர்கள் உண்டு. அவர் சற்றும் பொருட்படுத்தியதில்லை. அது மட்டுமல்ல, பாரதியாரின் ஜாதியைக் குறிப்பிட்டு, அல்லது அவரது பாடல்களிலுள்ள தங்களுக்கு ஒவ்வாத கருத்துக்களைக் குறிப்பிட்டு அவரது காது கேட்கக் கேவலமாகப் பேசி விட்டால் அவர்கள் புரட்சிக் கவிஞரிடமிருந்து லேசில் தப்பிவிட முடியாது. அந்த அளவுக்குத் தமது ஆசிரியரிடம் அவர் பக்தி கொண்டிருந்தார். சாதாரணமாக ஏதாவது பாட்டைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும் போது இதை 'எங்க அய்யிருன்னு எப்படிப் பாடியிருப்பார் தெரியுமா?' என்று பெருமையுடன் கூறுவார்.





✕ பாரதியார்

✕ பாரதிதாசன்
(சுப்புரத்தினம்)

## பாரதிதாசன் பிறந்த நாள் ஏப்ரல் 29-ந் தேதி

# "அமுதென்று பேர்; உயிருக்கு நேர்!"

கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன், 'பணம்' என்றொரு படம் எடுத்தார். அதில் "பசியென்று வந்தவருக்கு புசி என்று ஒரு பிடி அன்னம் தந்து பாரப்பா" என்ற கவிஞரின் பாடலைப் படமாக்கினார். "அதற்கு எவ்வளவு பணம் வேண்டும்?" என்று கேட்டுக் கொடுத்துவிட்டு வரும்படி புதுவைக்கு ஆளை அனுப்பினார். கவிஞர், பலமாகச் சிரித்துவிட்டு "கலைவாணர் எடுக்கிற படத்தில் புரட்சிக் கவிஞருக்குப் பணமா? போய்யா! போ!" என்று பணம் கொண்டு வந்தவரை விரட்டிவிட்டார்.

"பாடலைப் பொருத்தமான காட்சியில் சேர்த்துப் படம் எடுக்கச் சொல்லுங்கள்.' துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ இன்பம் சேர்க்க மாட்டாயா' என்ற பாடலைக் காதல் காட்சியில் பயன்படுத்தி விட்டார்கள். நான் அதை எழுதியபோது காதல் உணர்வு பற்றிச் சிறிது கூட நினைக்கவில்லை.." என்று மட்டும் சொன்னார். சென்னைக்கு வரும்பொழுது மிக அவசரமாக ஏதாவது தேவைப் பட்டால் கலைவாணருக்குக் கடிதம் கொடுத்தனுப்புவார். 'நான் சென்னை வந்திருக்கிறேன்' என்று மட்டும் எழுதிக் கடிதம் கொடுத்தனுப்புவார். கடிதத்திலும் சரி நேரிலும் சரி தமது தேவையைக் குறிப்பிடவே மாட்டார். கவிஞரின் சுயமரியாதைத் தன்மையை உணரும் பண்புடைய கலைவாணரானதால் தக்கவாறு அவரும் நடந்து கொள்வார்.

– பரந்தாமன்

"தூக்கம் உன் கண்களைத் தழுவட்டுமே
அமைதி உன் நெஞ்சில் நிலவட்டுமே - அந்தத்
தூக்கமும் அமைதியும் நானானால்..."

கண்ணதாசனின் இப்பாடலைக் கேட்டிருப்பீர்கள். இது ஷேக்ஸ்பியர் வரிகளின் தமிழாக்கம். ரோமியோ ஜூலியட்டில் சில வரிகள்:

"Sleep Dwell upon Thine Eyes,
Peace in Thy Breast,
Would I were Sleep and Peace,
So Sweet to Rest."

ஆதாரம்: கண்ணதாசனின் "நெஞ்சுக்கு நிம்மதி" என்ற புஸ்தகம்.

— உப்பிலியப்பன் கோயில், பாஸ்கர்.

# சிரிக்கச் சிரிக்க!



வேட்டைக்குப் போன மகாராஜா கூடாரத்துக்கு அவசரமாக ஓடிவந்தார்.

அவர் : மந்திரி இருக்கிறாரா?

சேவகன் : இருக்கிறார் மகாராஜா!

அவர் : சேவகர்கள் இருக்கிறார்களா?

சேவகன் : இருக்கிறார்கள்.

அவர் : ஐந்து பேரும்?

சேவகன் : ஐந்து பேரும் இருக்கிறார்கள்.

அவர் : அப்படியானால் நான் கொன்றது கரடியைத்தான்! —கல்லிடை கைலாசம்

●

போலீஸ்காரர், "ஏம்பா சைக்கிள்லே லைட் இல்லையா?" என்று கேட்டார்.

சைக்கிள்காரன் குறும்பாக, "தெருவிலே இவ்வளவு லைட் எரிகிறதே பிறகு என் சைக்கிளுக்கு எதற்கு லைட்?" என்றான்.

உடனே அந்தப் போலீஸ்காரர், சைக்கிள் சக்கரத்திலிருந்து காற்றைப் பிடுங்கி விட்டு விட்டு, "சுற்றுச் சூழலில் இவ்வளவு காற்று இருக்கிறதே! உன் சைக்கிளுக்குக் காற்று இல்லாவிட்டால் என்ன?" என்று கேட்டார்.

—சூரியநாராயணன்

●

ஒருவன்: காலங்காத்தாலே பையனை ஏன் இப்படிப் போட்டு அடிக்கறே?

மற்றவன்: கந்தர் சஷ்டி கவசம் படிக்கிறான்.

ஒருவன்: நல்லதுதானே? அதுக்கா இப்படி அடிக்கிறீங்க?

ஒருவன்: பூவரசம்பூ பூத்தாச்சு ராகத்திலே படிக்கிறான். —ஆர். கோபாலகிருஷ்ணன்



"நான் எப்பத் துணி வாங்கினாலும் வெள்ளைக் கலர்லேதான் வாங்குவேன்."

"ஏங்க அப்படி?"

"சாயம் போயிடுமோங்கற பயமே இல்லே பாருங்க!" —ஷேக் ஸின்தரா மாதார்

●

அம்மா: குழந்தைக்கு இரண்டு நாளா உடம்பு சரியில்லே.

அப்பா: திருஷ்டியாகத்தான் இருக்கும். சுத்திப் போடறதுதானே?

அம்மா: சுத்திப் போட்டேன்... குழந்தை கீழே விழுந்து அடி வேறன்னு பட்டிருக்கு...

—எஸ். பிரகாஷ்

●

"ஏன் மோட்டார் சைக்கிளைத் தள்ளிக்கிட்டுப் போறீங்க! ரிப்பேரா?"

"இல்லே. பெட்ரோலை மிச்சப்படுத்தறேன்!"

—வெ. சீதாராமன்

●

ஒருவர்: எப்பவும் மேடையிலே எதிர்க் கட்சிகளுக்குச் சுடச் சுடப் பதில் கொடுப்பீங்களே. இன்னிக்கு என்னங்க பேச்சிலே சூடே இல்லே?

பேச்சாளர்: சோடா பாட்டிலே எல்லாம் ஐஸ்லே வைச்சு ஜில்லுன்னு கொண்டு வந்துட்டான். எப்படி சுடச் சுடப் பதில் கொடுக்க முடியும்?

—கே. ஆர். எம்.

●



முரளி: அப்பா இன்னும் ஆபீசிலிருந்து வரக் காணோமேடா?

ஸ்ரீதர்: இன்று அவருடைய ஆபீஸ் பரீட்சை ரிசல்ட் வரப்போறதாச் சொன்னார். ஒருவேளை ஃபெயில் ஆயிட்டு வீட்டுக்கு வரப் பயந்து கொண்டு இருக்கிறாரோ என்னமோ!

—லலிதா செல்லப்பா

●

"என்னது... நீ நடிச்ச படம் நூற்றைம்பது நாள் ஓடியிருக்கா?"

"ஆமா... 'கிழக்கே போகும் ரயில்'லே கடைசி சீன்லே கதாநாயகனையும் கதாநாயகியையும் தூரத்திக்கிட்டுப் போற ஆட்களிலே நானும் ஒருத்தனா நடிச்சிருக்கேனே!"

—எம். ஏ. அப்துல் காதர்



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1979

ஏராளமான எழுத்தாளர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி முடிவு தேதியை ஒரு மாதத்துக்கு ஒத்திப் போட்டிருக்கிறோம்.

**முடிவு தேதி: மே 31**

எழுத்தாளர்கள் இந்த வாய்ப்பைப் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

| | |
|---|---|
| **முதல் பரிசு** | **ரூ. 1000** |
| **இரண்டாம் பரிசு** | **ரூ. 500** |
| **மூன்றும் பரிசு (இரு கதைகளுக்கு தலா ரூ. 250 வீதம்)** | **ரூ. 500** |

ஆகமொத்தம் ரூ 2000 - பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ 100 - சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளருக்கு போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்குமுன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர்கள் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.
- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப்பெற போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப்போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது —

**ஆசிரியர் கல்கி, சென்னை-600 032.**

தாளிப்பு

கருகு

# இரண்டு கடிகாரங்கள்

**குட்டிப் புதிர்**

ராமனுடைய கடிகாரம் 10 நிமிஷம் தாமதமாகச் செல்கிறது. ஆனால் 5 நிமிஷம் வேகமாகப் போகிறது என்று நான் நினைத்துக் கொண்டு இருக்கிறேன்.

பாலனுடைய கடிகாரம் 5 நிமிஷம் வேகமாகப் போகிறது. ஆனால் அது 10 நிமிஷம் பின்னால் போகிறது என்று நீ நினைத்துக் கொண்டு இருக்கிறாய்.

மாலை 3 மணிக்குப் புறப்படும் ரயிலில் போக ரிசர்வ் செய்திருக்கிறார்கள்.

சரி, இருவரில் யார் ரயிலைப் பிடிக்க முன்னதாகச் செல்வார்கள்?

மனத்திலேயே இந்தப் புதிருக்கு விடை கண்டு பிடியுங்கள்.

**இரண்டு கடிகாரங்கள் விடை :**

பாலன்தான். ராமன் ரயிலைக் கோட்டை விடுவான்.

ஐந்து நிமிஷம் வேகமாகப் போகிறது என்று ராமன், அவனது கடிகாரப்படி 3.05க்கு வருவான். ஆனால் அப்போது சரியான நேரம் 3.15 (அவனது கடிகாரம் 10 நிமிஷம் 'ஸ்லோ' அல்லவா )

பாலனோ, தன் கடிகாரம் 10 நிமிஷம் ஸ்லோ என்று 2.50க்கு வந்து விடுவான். ஆனால் அது உண்மையில் 5 நிமிஷம் முன்னதாகச் செல்வதால், அப்போது சரியான நேரம் 2.45 ஆக இருக்கும்!

✕

**'I'யே மெத்தக் கடினம்**

ஆங்கில 'ஐ' உயிர் எழுத்தை மட்டும் உபயோகித்து எழுதப்பட்ட 'பாரா'வைத் 'தாளிப்பில்' பார்த்த ஒருவர் 'I'யை மட்டும் உபயோகித்து எழுதப்பட்ட கவிதையை அனுப்பியிருக்கிறார்.

Idling I sit in this mild
twilight dim
Whilst birds, in wild swift
vigils circling skim
Light wings in sighing pink
till rising bright
Night's virgin pilgrim
swims
in vivid light!

## பொருத்தமான முறையில்

சிசில் பி. டிமில் எடுத்த 'பத்துக் கட்டளைகள்' திரைப் படம் காட்டப்பட்ட ஓர் அமெரிக்க தியேட்டரில், இடையில்



சிலைடு போட்டார்கள்: Thou shalt not smoke. (நீங்கள் புகை பிடிக்காமல் இருக்கக் கடவீராக!)

✕

ஆபீஸ் அறைகளில் ஏதாவது ஒரு வாசகத்தை எழுதி மாட்டி வைப்பது இப்போது பாஷனாகிவிட்டது. சிலர் சீரியஸாக எழுதி வைக்கிறார்கள்; வேறு சிலர் நகைச்சுவையாக எழுதுகிறார்கள்.

இதோ சில மாதிரிகள்

"அதை நாளைக்குச் செய். இன்றைக்குத் தேவையான அளவு தவறுகளைச் செய்து விட்டாய்!"

"இது தான் என் விசனம்: நான் சரியாகச் சொல்வதை யாரும் நினைவில் வைத்துக் கொள்வதில்லை. நான் தப்பாகச் செய்வதை யாரும் மறப்பதில்லை".

"எப்போதும் சரியாகச் செய். சிலருக்குத் திருப்தி அளிக்கும். பலருக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தும்!"

"உலகிலேயே மிகப்பெரிய பொய்யன் உங்கள் ஆதாரமற்ற பயங்களே!"

உங்களுக்குத் தெரிந்தவர்களின் அலுவலகத்தில் அல்லது வீட்டில் இந்த மாதிரி சுவையான வாசகம் எழுதப்பட்டிருந்தால் அதை விவரங்களுடன் எழுதி அனுப்புங்களேன்.

உங்களைப் பெரிய சிந்தனையாளன் என்று நீங்கள் நினைத்துக் கொள்கிறீர்களா? அப்படி எனில், உங்களின் மிகச் சிறந்த சிந்தனை என்ன என்று உங்களைக் கேட்டுவிட்டு, அதைத் தொடர்ந்து ஏற்படும் மௌனத்தைக் காது கொடுத்துக் கேளுங்கள்.

—மாரோ.

✕

இதோ ஓர் ஆங்கில வாக்கியம். இதில் ஒரு விசேஷம் இருக்கிறது. அதைக் கண்டு பிடிக்கமுடிகிறதா பாருங்கள்: I do not know where family doctors acquired illegibly perplexing handwriting.

ஒவ்வொரு வார்த்தையிலும் எத்தனை எழுத்துக்கள் என்று கவனியுங்கள். ஏறு வரிசையாக அமைந்திருப்பது தான் விசேஷம் .

✕

இதோ உள்ள எண்களுக்கு ஒரு பொதுவான சிறப்பு உண்டு. அது என்ன?

11, 69, 88, 96, 101

என்ன தெரியவில்லையா? தலை கீழாகப் பார்த்தாலும் அவைகளில் மாற்றம் கிடையாது.

✕

**லால்குடி சிலேடை வீசுகிறார் !**

லால்குடி ஜெயராமன் அவர்கள் டில்லிக்கு வந்திருந்த போது டெலிபோன் செய்தார். பல விஷயங்கள் பேசிய பிறகு கேட்டார்: "ஆமாம். இந்த நூதன ஸ்டவ் விற்கிறார்களே. அதற்குத் திரி வேண்டும். திரியே கிடைக்கவில்லை. திரிந்து பார்த்துவிட்டேன்."

"மொத்தமாகக் கிடைக்காவிட்டாலும் உதிரியாகக் கிடைக்குமே" — என்றேன்.

"அந்த திரி, உதிரியாகவும் கிடைக்கலே. அது மாதிரியே கிடையாது என்கிறார்கள்."— என்றார் ஒரு படி மேலே போய்.



படவிமரிசனம்:

# நினைத்தாலே இனிக்கும்



சிங்கப்பூர் 'வா வா' என்று அழைக்கிறது! கண்ணுக்கினிய காட்சிகள், வியப்பூட்டும் மாட மாளிகைகள்: பாஸ்போர்ட், பணச் செலவு எதுவும் இல்லாமல் போய்த் திரும்பலாம். அதற்கு வசதி செய்கிறது படம்:

கள்ளக் கடத்தல், விஷ ஊசி மர்மங்கள் எல்லாம் படத்தில் இருப்பதுபோல் மாய்மாலம்தான். கதாநாயகி சோனு இல்லாத பொய்யெல்லாம் சொல்லிக் கதாநாயகன் சந்துருவைத் திணற அடிக்கலாம்! ஆனால் சஸ்பென்ஸ் முடிச்சு கதாநாயகி புற்று நோயால் அவஸ்தைப் படுபவள் என்பதுதான்! வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்! டைரக்டர் பாலசந்தர் அழுத்தமான கதை இல்லாமலே இம்முறை படமெடுத்து இருக்கிறார்: ஜஸ்ட் லைக் தட் — பொழுது போக்கு — அவ்வளவுதான்:

கமலஹாஸன் 'ஜொாமர் பாய்' சந்துருவாக ஆடிப் பாடிக் கொட்டமடிப்பதோடு சோனுவின் (ஜெயப்பிரதா) காதலை நாடிச் சிங்கப்பூர் அழகிய மண்ணில் அவளைச் சுற்றி வருகிறார். கடைசியில் புற்று நோய் மலர்ந்த பெண்ணை மணந்து அவளைப் பறியும் கொடுக் கிறார்! நினைத்தாலே இனிக்கும் நினைவுகளிலேயே தம் வாழ்நாளைக் கடத்துகிறார்! காது செவிடுபடும்படி பாப் மியூசிக்கால் அத்தனை பேரையும் கிறங்க வைக்கிறாரே அதற்காக அவருக்குக் கிடைத்த தண்டனையோ இது!

தீபக், சந்துருவின் இசைக் குழுவில் அங்கம் வகிப்பவர்! அவ்வப் பொழுது பிறர் பாக்கெட்டைப் பதம் பார்ப்பவர்! ரஜனி சிறப் பாகச் செய்திருக்கிறார்.

பல காமிரா கோணங்களில் சிங்கப்பூர் வண்ணக் காட்சிகளை அள்ளி வழங்குபவர் பி. எஸ். லோகநாத்.

சுஜாதாவின் கதை பாலசந்தர் டைரக்ஷனில் விகவ ரூபமெடுத் திருக்கிறது! கதையில் நம்ப முடியாத நிகழ்ச்சிகளும் தொடர்பற்ற விஷயங்களும் உண்டு! எது எப்படிப் போனால் என்ன? பாலசந்தர் ஒரு பொழுதுபோக்குப் படத்தை இளைஞர்களுக்கு என்றே தயாரித்துத் தந்திருக்கிறார்! யார் கண்டது? அவர்களுக்கு 'நினைத்தாலே இனிக்கும்' சசக்காத படமாக இருக்கலாம்!

— பி. எஸ். எம்.

# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

## ஜெயகாந்தன்

### 5. பெரிய தேர்...

சிங்காரம் தோணித் துறையிலிருந்து இன்று வழக்கத்துக்கு மாறாகத் தனியாக வந்தான். அவனது அக்கரை நண்பர்கள் இன்று இவன் தங்களோடு வரமாட்டான் என்று வீட்டருகே வந்து காத்திருந்த பின் தங்கள் கோஷ்டியுடன் திருவிழாப் பார்க்கப் போய் விட்டார்கள்...

அக்கரை வெறிச்சென்றிருந்தது. சில குடிசைகளில் நகர முடியாத வயதானவர்களும் சில பெண்களுமே இருந்தனர். சிங்காரம் தூரத்திலிருந்தே வெள்ளையம்மாளின் வீடு திறந்திருப்பதையும் வாசலுக்கு நேரே வெள்ளையம்மாள் குந்தி உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருப்பதையும் பார்த்து நேரே — ஒரு சாரைப் பாம்பு மாதிரி — அவள் வீட்டை நோக்கி வேகமாய் வந்தான்!

அவன் பின்னால் வருகிற நண்பர்கள் இல்லாததால் சிங்காரம் தானே வலக் கையில் சிகரட் டின்னும் அதன் மீது தீப்பெட்டியுமாய் வேட்டியின் ஒரு முனையைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு, இன்னொரு கையை வீசிக் கொண்டு கம்பீரமாய் நடந்து வருகிற தோற்றத்தைப் பார்த்து வெற்றிலைக் காவியேறிய பற்கள் முகமெல்லாம் விரிந்து விகசிக்க... ''வா! மாப்பிளே, பொண்ணு திருவிழாப் பார்க்கப் அப்பவே பூட்டாளே!... நீ போட்ட தங்கச் சங்கிலியை மாட்டிக்கினு தான் தேரு பார்க்கப் போவணுமாம்!'' என்று அறைக்குள் மறைந்திருக்கும் ரஞ்சிதத்திற்கு ஒத்தாசையாக அவனைப் பரிகாசம் பண்ணினாள்.

ஆனாலும் அவன் தன்னை நோக்கி வருகிற வேகத்தையும். அவன் கண்களில் ததும்பி வழிகிற தாபத்தையும் ஒரு நொடியில் புரிந்து கொண்டு, உடம்பே ஒடுங்கிக் குறுக ஒரு புறமாய் எழுந்து நின்று 'ரஞ்சிதம் உள்ளே தான் இருக்கா — ஒளிஞ்சிக்கினு' என்ற ரகசியத்தை உடைத்துத்தான் அவள் தன்னை இவனுடைய பாய்ச்சலுக்கு இரையாகாமல் காத்துக் கொள்ள முடிந்தது...

ஒரு விநாடியில் முகமெல்லாம் 'குப்'பென வியர்த்து நெற்றியில் முத்துச் சரம் கட்ட, சுதாரித்து, சுதிகலைந்து நிலைகுலைந்த வாத்தியக்காரனைப் போல் தடுமாறிச் சிரித்தான் சிங்காரம்...

''போடி பொம்பளே!... ஏன் சொன்னே நீ... உனக்கு ஒண்ணும் தெரியலே...'' என்று தாயைச் செல்லமாகக் கண்டித்து



முகத்தை நெறித்துக் காலே உதறிக் கொண்டு அறையிலிருந்து வெளியே வந்தாள் ரஞ்சிதம்.

மூலையில் குப்புறக் கிடந்த மரக் குத்தாணியைத் தூக்க தட்டி அதன் மேல் ஓர் ஈச்சம் பாயை மடித்துப் போட்டு 'மெத்'தென்று அதன் மீது ஒரு தட்டுத்தட்டி ''குந்து மாப்பிளே'' என்று சிங்காரத்தை உபசரித்தாள் வெள்ளையம்மாள்.

தன் மகள் புதுச் சித்தாடை கட்டி, தலே நிறையப் பூ வைத்துக் கொண்டு, வடம் போன்ற அந்தத் தங்கச் சங்கிலியை எடுப்பாக மார் மீது கிடத்திக் கொண்டு வந்து அவன் எதிரே நிற்கிறாள், இவன் தன்னையே பார்வையால் உறுத்திக் கொண்டிருப்பதைச் சகிக்க முடியாமல்

'' அங்கே திரும்பிப் பாரு மாப்பிள்ளே! பொண்ணு சிங்காரிச்சிக்கினு தேரு பாக்கப் பொறப்பட்டுரு...'' என்று சிங்காரத்தின் மோவாயைப் பிடித்து மகளின் பக்கம் திருப்பினாள்... அவளது கையிலிருந்து வீசிய மீன் நாற்றம் — அவன் மீது தெளித்துக் கொண்டு வந்திருந்த பிரெஞ்சு நாட்டு நறுமணத்தை விடவும் — அவனுக்குச் சுகந்தமாய் நாசியருகே இழைந்தது. அவன் கையை அப்படியே இறுகப் பற்றிக் கொள்ள வேண்டுமென்று எழுந்த இச்சையை இழுத்து அணைத்துத் தடுத்துக் கொண்டு ரஞ்சிதத்தைப் பார்த்து ''தேர் பாக்கவா போறே?... நீதான் தேர் மாதிரியிருக்கே; சின்னத் தேர்... குட்டித்தேர்...'' என்று ரஞ்சிதத்தைக் கொஞ்சியவாறு பார்வையால் பளீர் பளீரென ''நீதான் பெரிய தேர்... அம்மா தேர்... '' என்று சொல்லாமலே வெள்ளையம்மாளை உறுத்தினான்...

''ஏன் தம்பி, நீயும் போயிட்டு வாயேன் தேரு பாக்க...'' என்று சிங்காரத்தைக் கழட்டி விடப் பார்த்தாள் வெள்ளையம்மாள்...

''நான் போகாமலா? நான் போகாமல் தேர் நகர்ந்துடுமா? ராவிக்குத் தானே தேர் புறப்படும்! இந்தக் காட்டுப் பசங்க மாதிரி சோறு கட்டிக்கிட்டு, வண்டி கட்டிகிட்டுப் போயிக் காத்துக் கெடக்கணுமா?... சரிசரி, ரஞ்சிதம் நீ போயிட்டு வா — அங்கே நான் வந்து பெரிய தேரையும் சின்னத் தேரையும் பார்ப்பேன்'' என்று கண்ணைச் சிமிட்டிக் கொண்டே பையில் கை விட்டு ரூபாய் நோட்டுக்களை அள்ளித் தந்தான்...

அப்படித்தான் அவன் பழக்கம். பணத்தை எண்ணிச் செலவு செய்பவர்களைப் பார்த்தாலே 'பாவம்' என்ற பெருமூச்சு விடுவான் சிங்காரம். மேலும் இந்த மாதிரி அள்ளித் தந்து இந்தப் பாமர ஜனங்களை ஆச்சரியத்தால் வாய் பிளக்கச் செய்வதில் அவனுக்குப் பெருவகை கரந்து பெருகும்... அப்படி ஒரு குணம்... நல்லதோ கெட்டதோ?

'பாத்தியா, நான் சொன்னேனே... இவரு வந்து இந்தச் சங்கிலியைத் திருப்பி வாங்கிட்டுப் போயிடுவாருன்னு நீ சொன்னியே — இப்பப் பாரு.. அதுக்கு மேலே எம்மாங் காசி வேற குடுக்கறாரு...' ''அங்கே நா உங்களைத் தேடித் தேடிப் பார்த்துக்கினு இருப்பேன்... வரணும், தேரு பாக்க'' என்று சிங்காரத்தை வேண்டி வேண்டிக் கேட்டுக் கொண்டு அக்கம்பக்கத்துப் பெண்கள் புறப்படுவதைப் பார்த்து ''யம்மா... நான் திருநா பாக்கப் போயிட்டு வரேன்...'' என்று கூவி விடை பெற்றுக் கொண்டு சிற்றாடை காற்றில் பறக்க ஓடினாள் ரஞ்சிதம்...

வெள்ளையம்மாளுக்கு தனிமையில் சிங்காரத்தின் மேலிருந்து நெடியுடன் வீசுகிற சென்ட் மணத்தின் நெருக்கத்தில் இருப்பது இன்று ஏனோ கொஞ்சம் அச்சம் தந்தது.. அவள் உடம்பு ரகசியமாக உள்ளூர நடுங்கிற்று. சிங்காரம் ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துப் புகையை ஊதியவாறு தோணித் துறையை நோக்கிப் போய்க்கொண்டிருக்கும் பெண்களின் வண்ணக் கோலத்தில் லயித்து எதற்கோ காத்திருப்பவன் போல் பொறுமையற்றிருந்தான்...

''இந்த முக்காலியை வெளியே போடறேன், காத்தாடக் குந்தேன்... வந்ததிலேருந்து நின்னுக்கினு இருக்கியே...'' என்று சொல்லி அவளை வீட்டிலிருந்து திறந்த



வெளிக்கு அழைத்து வர எண்ணி நகர்ந்தாள் வெள்ளையம்மாள்...

''இங்கே கடல் காத்து நல்லா அடிக்குதே!'' என்று புறக்கடை வழியாய்த் தெரியும் நீலக் கடலையும் நெடிய வானத்தையும் ஊடுருவிப் பார்த்த சிங்காரம், வெள்ளையம்மாளின் கையைப் பிடித்து இழுத்து நிறுத்தினான்.... அவளை அவன் இழுத்த வேகத்தில்—தூரத்தில் தெரியும் சமுத்திரமே அவள் மீது வந்து சரிந்ததுபோல்-அவள் மீது வீசித் தள்ளி இழுத்துச் செல்வது போல் — அவன் மீது தடுமாறிச் சாய்ந்தாள் வெள்ளையம்மாள்.

''புள்ளே! வேணும் புள்ளே.... வுடு...... தப்பு... தப்பு... நான் சொல்றதைக் கேளு... புள்ளே.... என் பொண்ணு... ரஞ்சிதம்... புள்ளே, நாஞ் சொல்றதெக்...''



அவன் அவளைத் தழுவி உணர்ச்சிகளின் சுழிப்பில் திக்குமுக்காடினான்... ஓர் உந்தலில் வெள்ளையம்மாள் சிங்காரத்தை உதறி ஓடி வந்து கரையேறுவது போல் — வீட்டுக்கு வெளியே பாய்ந்து வந்து நின்று கொண்டாள்...

அக்கரையின் 'ஓ' என்ற தனிமையில் தென்னை மரங்களின் தலையாட்டலும் கீற்றுக்களின் சலசலத்த ஓசையும் பெரிதாக இரைந்து கொண்டிருந்தன. (தொடரும்)

---

## 'தர்ம சங்கடம்' — தம்பு!






மேலட்டை :

இனிய புனல் அருவி தவழ்
இன்ப மலைச் சாரலிலே...

*

சிவசமுத்திரம் அருவி முன்பாக
குமாரி மாலினி.

*

வண்ணப்படம்: ஆர். எஸ். கிருஷ்ணமூர்த்தி.



# எங்கே போகிறோம்?



( தொழிலதிபர் சித்ரா நாராயணசாமி யிடம் சில கேள்விகள். )

# அனைத்தையும் அரசுடைமையாக்குவது அவசியம் தானா?

**கேள்வி:** டாடா இரும்பு எஃகுத் தொழிற்சாலை, அலுமினியம், ஆட்டோமொபைல் தொழில்கள் போன்ற முக்கியமான தொழில் துறைகளை உடனடியாகவும், மற்றைய எல்லாத் தொழில் துறைகளையுமே படிப்படியாகவும் தேசிய மயமாக்கி, அரசே முழுமையாக எடுத்து நடத்த வேண்டும் என்று மத்தியத் தொழில் அமைச்சர் ஜார்ஜ் பெர்னாண்டஸ் அவர்கள் சமீபத்தில் கருத்து வெளியிட்டிருக்கிறாரே அதைப் பற்றித் தாங்கள் என்ன தெரிவிக்கிறீர்கள்?

**திரு நாராயணசாமி:** அரசுத் துறை தொழிலகங்களின் செயல் திறன்பற்றிப் பாராளுமன்றத்தால் நியமனம் பெற்றுச் செயல்படும் *Public Accounts Committee*யின் ஆய்வு விளக்கங்களைக் காணும்போது மத்திய தொழிலமைச்சரின் கருத்து, நடைமுறையில் செயல் படுத்தப் படுமானால் நாட்டின் பொருளாதார அபிவிருத்திக்கு அது எந்த அளவுக்கு உதவும் என்று எனக்குப் புரியவில்லை.

தொடர்ச்சியாக நஷ்டத்திலேயே இயங்கி வரும் துர்க்காபூர் இரும்பு ஆலையின் எதிர்காலம் பற்றி அரசே நம்பிக்கை இழந்து விட்டது என்பது எல்லோரும் அறிந்த உண்மை. டாடா இரும்பு எஃகு தொழிற்சாலையின் மூலதனத்தில் பெரும்பங்கைத் தற்போதும் அரசுதான் வைத்திருக்கிறது. இந்நிலையில் இதனை முழுமையாகத் தேசிய மயமாக்குவதால் இதன் உற்பத்தித் திறனிலோ, அதன் மூலம் நாட்டின் பொருளாதார நிலைக்கோ பெரிதாக எவ்விதப் பலனும் வந்துவிட முடியாது.

**கேள்வி:** இம்மாதிரி முக்கியமான தொழில்களைப் பொதுவுடைமை ஆக்காமல் தனியார்த் துறையிடமே நீடிக்கச் செய்வதனால் மட்டும் இந்தியப் பொருளாதாரத்தில் பிரமிக்கத்தக்க அபிவிருத்தி வந்துவிடும் என்று நம்புகிறீர்களா?

**திரு நாராயணசாமி:** பிரமிக்கத்தக்க அபிவிருத்தி வரும், வராது என்றெல்லாம் நான் கூற முற்படவில்லை.

நாட்டின் பொருளாதாரக் கொள்கைகளில் முக்கியமான மாற்றங்கள் செய்ய முற்படுமுன் கடந்தகால அனுபவங்களையும் விளைவுகளையும் ஆழ்ந்து ஆராய்ந்து செயல்பட வேண்டியது அவசியம். அரசுத் துறையில் இருக்கும் தொழில்களின் முன்னேற்றம் தனியார் தொழிலைவிட நிச்சயம் குறைவு தான் என்று என்னால் திட்டவட்டமாகக் கூற முடியும்.

நிலக்கரித் தொழில் அரசுத் துறையின் வசத்தில்தான் உள்ளது. இரும்பு எஃகு தொழில், ரயில்வே, சிமெண்ட் உற்பத்தித் தொழில் ஆகியவை எந்த அளவுக்கு நிலக்கரித் தொழிலை நம்பி உள்ளன என்று நமக்குத் தெரியும்.

நிர்வாகத் திறமையின்மையால் நிலக்கரி தொழிலில் உற்பத்தி பாதிக்கப்பட்டு அதன் விளைவாக சிமெண்ட் உற்பத்தியும், இரும்பு எஃகு தொழிலும் எந்த அளவுக்கு க்ஷீணம் அடைந்துள்ளன என்பது கண்கூடு.

அரசுத் துறையில் இருக்கும் இன்னொரு முக்கிய தொழில் செம்பு. ஒரு டன் நாலாயிரம் ரூபாய்க்கு விற்கப்பட்ட இவ்வுலோகம் ஐந்து வருடங்களுக்குள்ளாக ஒரு டன் பதினையாயிரம் ரூபாய்க்கு உயர்ந்துள்ளது. அரசுத் துறைத் தொழிலகங்களின் நிர்வாகத் திறமையின்மைக்கு உதாரணமாகச் செம்புத் தொழில் ஒன்றே போதுமே!

கல்கி மே 13





**கேள்வி:** இவ்விஷயத்தில் தனியார்த் துறை விதி விலக்கு அல்ல என்பது என் அபிப்பிராயம். சிறப்பாக இயங்கிக் கொண்டிருக்கும் எத்தனையோ தனியார்த் துறை தொழிற்சாலைகள் திடீர் திடீரென நோயுற்று விடுகின்றனவே?

**நாராயணசாமி:** ஒரு தனியார் தொழிற்சாலை ஆரம்பித்துக் காலூன்றி, சிறப்பாகச் செயலாற்றும் நிலைக்குவந்து லாபம் சம்பாதிக்கக் குறைந்த பட்சம் ஆறு, ஏழு ஆண்டுகளாவது ஆகும். இந்நிலைக்கு ஒரு தொழிற்சாலை வரும் நேரத்தில் அரசாங்கத்தின் ஏற்றுமதி இறக்குமதி கொள்கையில் முக்கியமான மாற்றம், வரி உயர்வு, தொழிலாளர் ஊதியக் கொள்கையால் பாதகமான விளைவுகளைத் தொழிற்சாலைக்கு உண்டாக்கக்கூடிய சட்டங்கள் போன்று எவையேனும் தோன்றுமாயின் தனியார் துறைதான் என்ன செய்ய முடியும்? ஒரு சில தொழிலகங்கள் இவற்றால் பாதிக்கப்படத்தான் செய்கின்றன. ஆனால் இவற்றின் எண்ணிக்கை சிறப்புடனும், திறமையுடனும் இயங்கும் தனியார் தொழிற்சாலைகளின் மொத்த எண்ணிக்கையில் மிகமிகக் குறைவே. இம்மாதிரி நலிவுறும் ஒரு சில தொழிற்சாலைகளும் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்துக்குள் சுதாரித்துக் கொண்டு மறுபடியும் சிறப்பாகப் பணியாற்றுவதைக் காணத்தான் செய்கிறோம். நோயுற்ற தொழிலகங்களைப் பற்றிக் குறிப்பிட்டீர்களே, இம்மாதிரி நலிவுற்ற தொழிற்சாலைகளுக்குப் புத்துயிர் கொடுப்பதற்காக அரசு அமைத்திருக்கும் *Industrial Refinance Corporation*னே சிறப்பாக இயங்காமல் நலிவுற்றிருக்கிறதே. இதற்கு என்ன சொல்கிறீர்கள்?

**கேள்வி:** தனியார் துறையில் இருக்கும் நிறுவனங்களைப்போல், அரசுத் துறை நிறுவனங்கள் பணியாற்ற முடியாது என்று தாங்கள் கருதுவதற்கு முக்கியமான காரணங்கள் எவை?

**நாராயணசாமி:** அரசுத்துறை தொழிலகங்களில் நிர்வாகத் தலைமையில் தொடர்ச்சி இருப்பதில்லை. அவர்கள் சம்பளம் வாங்கும் உத்தியோகஸ்தர்களே. அதனால் முதல் போட்டு நடத்துவோருக்கு இருக்கக் கூடிய தீவிரமான ஒரு ஈடுபாடு இவர்களுக்கு ஏற்பட முடியாது. நிர்வாகத் தலைமையில் அடிக்கடி மாற்றங்கள் வருவதால் நிர்வாகக் கொள்கைகளும் மாறும் நபர்களுக்கு ஏற்றாற்போல் மாற்றத்துக்கு உள்ளாகின்றன. இதனால் நிறுவனத்தின் திறமை நிச்சயமாகப் பாதிப்பு அடைகிறது. மேலும் அரசுத் துறையில் *Over head charges* அதிகம். தேவைக்கு அதிகமான வசதிகள், ஆட்கள், செலவினங்கள். இதெல்லாம் ஒன்றுகூடி அந்தத் தொழிற்சாலையின் சிறப்பைக் குறைப்பதுடன், அத்தொழிற்சாலைகளினின்று வெளிவரும் பொருள்களின் விலையும் உயர்வதற்குக் காரணம் ஆகின்றன!

**கேள்வி:** அரசுத் துறைத் தொழிலகங்களில் தேவைக்கு அதிகமான ஆட்கள் இருப்பதாக அபிப்பிராயம் தெரிவித்தீர்கள். இது வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னைக்கு உதவுவதாக அமையுமே? அதோடு இன்னொன்று. தனியார் தொழிலில் வரும் லாபத்தின் பெரும்பகுதி தனி மனிதர்களைப் போய்ச் சேர்கிறது. அரசுத்துறை தொழிற்சாலையில் உற்பத்தியாகும் பொருள்களின் விலை சற்றுக் கூடுதலாக அமையுமானாலும் லாபம் அரசாங்கத்துக்குத் தானே போய்ச் சேரப் போகிறது! இதனால் சமுதாய முன்னேற்றத்திற்குத் தானே உதவுகிறோம்?

**நாராயணசாமி:** இவ்வாதத்தை என்னால் ஏற்க முடியாது! வேலையில்லாத் திண்டாட்டம் என்பது நம் நாட்டில் தலைவிரித்தாடும் மிகப்பெரிய பிரச்னை ஆகும். சில தொழிலகங்களில் சில பேரை அதிகம் வேலைக்கு அமர்த்திக் கொள்வதனாலெல்லாம் இதனைத் தீர்த்து விட முடியாது. ஜனத்தொகைப் பெருக்கத்தைத் தீவிரமாகக் கட்டுப்படுத்த வழிமுறைகளை நமது அரசு மேற்கொள்வதைத் தவிர வேறு எந்த விதத்திலும் இப்பிரச்னைக்கு விடிவு காண முடியாது.

சமுதாய முன்னேற்றத்துக்கு உதவுவதானால் மக்களுக்குத் தட்டுப்பாடு ஏற்படாத வகையில் தேவையான பொருள்களை உற்பத்தி செய்து குறைந்த விலைக்குக் கிடைக்கச் செய்வதில்தான் அது உள்ளது.

தாங்கள் கூறியபடி தனியார் தொழிலில் வரும் லாபத்தின் பெரும் பங்கு தனி மனிதர்களைச் சேருவதில்லை. இத்தகைய லாபத்தின் ஒரு பகுதி தொழிலாளி



களுக்குப் பகிர்ந்தளிக்கப்படுகிறது. பெரும் பங்கை அரசே வரி விதித்து எடுத்துக் கொள்கிறது.

**கேள்வி:** அரசுத் துறையில் இருக்கும் ரயில்வே, தபால் தந்தி துறை, வங்கிகள் சிறப்பாகவும் திறமையாகவும் போதிய லாபத்துடன் செயல்படுவதோடு அல்லாமல் குறைந்த கட்டணத்தில் மக்களுக்குத் தங்களது இத்துறை சேவைகளை அளிக்கின்றனவே?

**நாராயணசாமி:** ரயில்வே இலாக்காவைப் பொறுத்த மட்டில் தங்களது வாதம் முழுமையாகப் பொருந்துகிறது. இத்துறைக்கு எனது மனமார்ந்த பாராட்டுக்கள். தபால் தந்தி இலாகாவினரும் தங்களது கட்டண விகிதங்களை உயர்த்தி விட்டனர். ஆனாலும் போதிய லாபம் இல்லை. தேசிய மயமாக்கப் பட்ட வங்கிகளைப் பொறுத்த மட்டில் சென்ற ஆண்டுவரை லாபம் கிடைத்தது. இவ்வாண்டு நிலைமை மாறியுள்ளதாக அறிகிறோம். தற்போதைய சூழ்நிலையைக் காணும்போது இனி இவ்வங்கிகள் லாபத்துடன் செயல்படுவது மிகவும் கஷ்டம் என்று தோன்றுகிறது!

**கேள்வி:** அரசுத் துறை நிறுவனங்களைவிடத் தனியார் துறை நிறுவனங்களில் தொழிலாளர்களின் வேலை நிறுத்தம், ஆர்ப்பாட்டம், கதவடைப்பு போன்றவை அதிகம் காணப்படுகின்றனவே!

**நாராயணசாமி:** அரசுத் துறை நிறுவனங்களைப் போல் ஊதிய உயர்வு அளிக்கும் விஷயங்களில் தனியார்த் துறை திடீரென செயல்பட முடியாது! உற்பத்தித் திறன், உற்பத்தி நிலை, லாப விகிதம் போன்று எல்லாவித அம்சங்களையும் ஆய்வு செய்து அதன் அடிப்படையில் ஊதியவிஷயங்களில் செயல்பட்டால்தான் தொழிற்சாலைகளைத் தனியார் துறை தொடர்ந்து நடத்த முடியும். இல்லாவிடில் இழுத்து மூட வேண்டியதுதான்! அரசுத் துறை நிறுவனங்கள் செவ்வனே நடக்காததற்குமேற்சொன்னது தானே முக்கிய காரணம்!

**கேள்வி:** கடைசியாக ஒரு விளக்கம். அரசுத் துறையே இல்லாமல் தனியார்த் துறையினரிடமே எல்லாத் தொழில்களையும் ஒப்படைக்க வேண்டும் என்பது தங்கள் கருத்தா?

**நாராயணசாமி:** இது தவறான கணிப்பு. நான் ஒரு தேசியவாதி. தேசிய நலனில் ஆழ்ந்த அக்கறையுள்ளவன். மக்களுக்கு நேரடியாகச் சேவை செய்ய ரயில்வே, தபால் தந்தி துறை போன்று முக்கியமான சமுதாயப்பணித் துறைகள் அரசுத் துறையில் தான் இருக்க வேண்டும். அதோடு தனியார்த் துறையையும் அரசாங்கம் வளர்த்துக் கலப்புப் பொருளாதாரம் தழைத்தோங்கச் செய்ய வேண்டும். என்னைப் பொறுத்த மட்டில் அரசுத்துறை நல்ல திறமையுடனும் விழிப்புணர்ச்சியுடனும் செயல்பட்டு மலிவான விலைக்கு மக்களுக்குப் பொருள்களையும், சமுதாயப் பணிகளையும் செய்ய உண்மையாகவே முடியுமானால் அரசுத் துறையை முழுமையாக வரவேற்பேன்! இத்தகைய நிலையில் நமது அரசுத்துறை இல்லையே என்கிற ஆதங்கத்தில்தான் எனது கருத்துக்களைக் கூறினேன். அரசுத் துறையில் உள்ள அடிப்படைப் பலவீனங்களைச் சரிசெய்யாமல் நாட்டின் தனியார்த் துறையிலுள்ள மற்ற தொழிற்சாலைகளையும் அரசுத் துறை எடுத்துக் கொள்ளுமானால் அதனால் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் எதிர்பார்த்ததற்கு மாறான விளைவுகள்தாம் உண்டாகும்.

பேட்டி : **நாயகன்**

## எதிர்காலச் செல்வங்கள்

கதை கேட்பதில் மிகுந்த ஆர்வம் உண்டு என் ஐந்து வயது மகன் முரளிக்கு. அவனிடம் 'ஏனோ தானோ' என்ற கதைகள் எடுபடாது. ஏனெனில் அவன் கதையைக் கேட்பதோடு மட்டும் நிறுத்திக் கொள்ள மாட்டான். தான் கேட்ட கதையை நன்கு அலசி, அது அவ்வாறு நடைபெறுவது சாத்தியமா வென்று ஆராய்ந்து பார்த்து விட்டுத் தான் மறுவேலை பார்ப்பான்.

ஒருநாள் நான், அவனுக்கு, ஆடு மேய்த்த சிறுவனும், ஓநாயும் கதையைச் சொன்னேன். உன்னிப் பாகக் கதையைக் கேட்டபின், உடனே சிறிதும் தாமதிக்காமல் கூறினான்: "என்னம்மா கதை இது? ஒரே தப் பாக இருக்கு."

"என்னடா பெரிய தப்பைக் கண்டுட்டே?" — இது நான்.

அவன் பதில் — "ஏம்மா. அந்த ஆட்டிடையன் குரல் கேட்கும் அளவு தூரத்திலேதானே ஜனங்க வேலை செய்தாங்க? தினமும் அவன் 'ஓநாய் வருது' என்று கத்தும் போது அவன் குரல்தான் அவங்களுக்குக் கேட்கும். ஆனால் ஆடுகள் நிசப்தமாய் மேயும்.



அதேபோல நிஜமாக ஓநாய் வந்த அன்று இவனும் அலறியிருப்பான். அதோட கூட அந்த ஓநாய் ஆடுகளைக் கொல்லும் போதே ஆடுகளும் பெரிசா 'மே... மே...' என்று அலறிக்கூப்பாடு போட்டிருக்குமே. அந்தச் சப்தம் அவங்களுக்குக் கண்டிப்பாகக் கேட்டிருக்குமே? அப்ப கூடவா அவங்களுக்குச் சந்தேகம் வரலை? போம்மா நீ! என்ன கதை சொல்றேம்மா நீ!" என்றான்.

உண்மையில் சொல்கிறேன். இதே கதையை என் சிறு வயதில் என் பெற்றோர் கூற நானும் கேட்டிருக்கிறேன். பின் படித்தும் இருக்கிறேன். இன்று வரை இந்த 'பாயிண்ட்' என் மூளைக்கு எட்டவே இல்லை. நான் அவனுக்கு என்ன பதில் சொல்வது? என் முகத்தில் அசடு நன்றாகவே வழிந்தது. இக்காலத்துப் பிள்ளைகள் அவ்வளவு எளிதில் ஏமாறுவது இல்லை என்பதும் புரிந்தது.

விலாஸினி ராமஸ்வாமி.

# தியாக வல்லபன்

## விக்கிரமன்



## அத்தியாயம் 6

## யார் அந்த வாரிசு?

**ப**ழையாறை நகரம், கங்கை கொண்ட சோழபுரத்தை விடக் கலகலப்பு மிகுந்து காணப்பட்டது. காவிரியின் அரவணைப்பால் இயற்கையாகவே வளம் பெற்றிருந்தது அந்நகரம். இராஜராஜ சோழதேவர் இப்போது சில ஆண்டுகளாகப் பழையாறையைத் தமது இருப்பிடமாகக் கொண்டிருந்ததாலும் பல நாட்டவர்கள் வணிகம் கருதி வந்து செல்வதாலும் மேலும் சிறப்புப் பெற்றிருந்தது.

அந்த நகரத்தில் சில நாட்களாகச் சோழ நாட்டுக் குறுநில மன்னர்கள் பலரின் வருகையால் ஆரவாரம் மிகுந்து காணப்பட்டது. ஒவ்வொரு சிற்றரசரும் தம்முடன் ஒரு பரிவாரத்தையே கொண்டு வந்திருந்தார். இரட்டைக் குதிரைகள் பூட்டி ஓடிய இரதங்களும், சூரியன் ஒளியில் தகதகக்கும் ஒளிவீசும் முக படாங்களையுடைய யானைகளும், குதிரைகளும், சிவிகைகளுமாகப் பழையாறை வீதிகள் திருவிழாக் கோலம் பூண்டு திகழ்ந்தன.

பழையாறை நகரின் ஒரு பகுதியான இராச இராசபுரத்து மாளிகையில் அனைவருக்கும் விருந்தளிக்கப் பெருமான் நம்பி பல்லவரையன் ஏற்பாடு செய்திருந்தார். அதற்கிடையில் நம்பி ஒவ்வொரு குறுநில மன்னரையும் தனித்தனியே சந்தித்து மனம் விட்டுப் பேசி அவர்கள் கருத்தை அறிந்திருந்தார். அனைவரையும் ஒருசேர விருந்து மண்டபத்தில் சந்திக்கும் திட்டத்தை அறிவித்தவுடன் அனைவரும் மகிழ்ச்சியுடன் வரச் சம்மதித்தனர்.

இராசராசபுரத்து மாளிகையின் நடுக் கூடத்தில் ஒளி வீசிய விளக்குகள் இரவை வென்று, பகலாக்கிக் கொண்டிருந்தன. காடவராயரும், சம்புவரையரும் முத்தரையரும், கடம்பராயரும் தத்தம் உடன் கூட்டத்தார்களுடன் வந்து சேர்ந்தனர். பேச்சொலியாலும், சிரிப்பொலியாலும் மண்டபமே அதிர்ந்தது.

குறுநில மன்னர்களைச் சிறிது நேரம் மகிழ்விக்கப் பலவித இசைக் கருவிகளுடன் இசைவாணர்கள் வந்திருந்தனர். யாழும், வீணையும், மத்தளமும், குழலும் இன்னிசை எழுப்ப ஐராவதேச்வரர் கோயிலில் தேவதொண்டாற்றும் ஆடல் அணங்குகள் ஆடலால் மகிழ்விக்க வந்திருந்தனர். ''ஆடலழகியின் நாட்டியச் சிறப்பையும் இசை விருந்தையும் அளித்து, தளபதி எங்கள் கருத்தை எளிதில் மாற்றிவிட முடியாது'' என்று சம்புவரையர் குரல் கொடுத்தார். அவரது இடி முழக்கம் போன்ற குரலால், மண்டபத்தில் ஏற்பட்டிருந்த களிப்பும், கும்மாளமும் ஒரு கணம் நின்று அமைதி நிலவியது.

''சம்புவரையர் என்னதான் சொல்ல விரும்புகிறார்?'' என்று பல்லவராதித்தன் கேட்டான். அங்கு வந்திருப்பவர்களுள் வயதில் சிறியவன் அவன். இராஜராஜ சோழரின் சார்பில் கங்க நாட்டின் அரசப் பிரதிநிதியாக விளங்கியவன்.

''தம்பி, மனத்திலுள்ள அனைத்தையும் சொல்லவே இங்கு கூடியுள்ளோம். நாம் வந்த வேளை அரசர் உடல் நலம் சரியில்லாதிருக்கிறார். ஆனால், பெருமான்நம்பி நம்மைச் சந்தித்து நமது கருத்தைக் கேட்க இசைந்திருப்பதால் நாம் ஒளிவுமறைவு இன்றி எடுத்துச் சொல்லலாம்'' என்றார் காடவராயர், அவரது

முன்னோர்கள் திருமுனைப்பாடி நாட்டு நாடு காவல் அதிகாரியாகப் பல தலைமுறையினராக இருந்து வருகிறார்கள்.

''மனத்திலிருப்பதைச் சொல்ல வேண்டுமென்றால், ஒவ்வொருவரும் சோழநாட்டு இளவரசர் பதவி தங்களுக்கே வேண்டுமென்று கொண்டிருக்கும் ஆசையைத் தெரிவிக்கும்படி இருக்கும்'' என்றான் பல்லவராதித்தன், குறும்புச் சிரிப்புடன்.

''தம்பி, நீ எப்படிக் கூறலாம், எங்களுக்கு இளவரசுப் பட்டம் சூட்டிக் கொள்ள ஆசையென்று? ஒருவேளை உனக்கு அப்படிப்பட்ட எண்ணம் மனத்தின் அடித்தளத்தில் இருக்கலாம். இளம்பிள்ளை. நமது அரசருக்கு மிகுந்த அபிமானம் உன்னிடம் உண்டு. அதனால் இளவரசராகலாம் எனப் பகற்கனவு கண்டிருக்கலாம். எங்களையும் அப்படிச் சொல்லி விட்டாயே?'' என்று வங்கார முத்தரையன் சீறினார்.

பல்லவராதித்தன் 'ஹோ ஹோ'வென்று பெரிதாகச் சிரித்தான். அந்தச் சிரிப்பின் பின்னணியில் சீற்றமிருந்தது.

''நான் இளைஞன்தான். எனக்கும் உங்கள் அனைவரையும் போல் ஆசைகள் உண்டு. ஆனால் சோழ நாட்டின் இளவரசராக வேண்டும் என்ற பேராசை எனக்கு இல்லை. சோழச் சக்கரவர்த்திக்கு வாரிசு இல்லை என்றால் நாம் ஆசைப்படுவதில் அர்த்தமிருக்கிறது. வாரிசில்லாத அரசர் என்று அவரை நினைத்து விட்டீர்களா?'' என்று அவன் குத்திக் காட்டினான்.

மிக அமைதியாக ஒரு தூணின் ஓரமாக அமர்ந்திருந்த கடம்பராயர், ''நம் சக்கரவர்த்திகளுக்குக் குழந்தைகள் பிறந்திருக்கிறது என்ற செய்தியை இப்போதுதான் நான் அறிந்தேன். சக்கரவர்த்திகள் ஏன் இந்த நற்செய்தியை வெளியே சொல்லாமல் மறைத்து விட்டார். தம் குழந்தைகள் தமக்குப் பிறகு ஆள வேண்டாம் என்று அவர் கருதுவதில் ஏதோ ரகசியமிருக்க வேண்டும். அந்தக் குழந்தைகள் அவருடைய வாரிசுகளாக இல்லாமலிருப்பதற்கு வேறு ஏதாவது காரணமிருக்க வேண்டும்'' என்று கூறி முடிப்பதற்குள், ''என்ன சொன்னீர் காடவராயரே?'' என்று ஹுங்காரத்துடன் ஒருவர் சீறி எழும் குரல் கேட்டது.

திருக்கோவலூர் மலையமான் வாளை உருவிக் கொண்டு ஆவேசத்துடன் பேசினார்.

''கடம்பராயரே, என்ன சொல்லி விட்டீர்கள்? தெரிந்து சொன்னீர்களா? தெரியாமல்



## எதிர்காலச் செல்வங்கள்



அண்மையில் என்னுடன் படித்த ஒரு கிறிஸ்துவப் பெண்மணி தன்னுடைய பாலனுடன் வந்திருந்தாள். அவனுக்குப் பத்து வயதிருக்கும். அவனைப் பற்றி அவளுக்கு ஒரே பெருமை. உபாத்தியாயர், வீட்டில், பெரியோருக்கு ஒரு கடிதம் எழுதி வரச் சொல்லியிருந்தாராம். அவன் எழுதிய கடிதத்தை எனக்குக் காண்பிக்கும் பொழுது அவளுக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. அவன் பின்வருமாறு எழுதியிருந்தான்:

''கிறிஸ்துமஸ் தாத்தாவுக்கு பீட்டர் நமஸ்காரம். ஏன் வருஷத்தில் ஒரு நாள் மட்டும் எங்களைப் பார்க்க வருகிறீர்கள்? பாக்கி நாட்களில் நீங்கள் என்ன பண்ணுகிறீர்கள்? தினமும் நீங்கள் எங்களைப் பார்க்க வந்தால் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும்?''

இப்படிக்கு உங்கள் பேரன்,
பீட்டர்.

- கே. ஜலலக்ஷ்மி.

---

தான் சொன்னீர்களா? அறியாமை என்றால் மன்னித்து விடுகிறேன். அறிந்தும் அகம்பாவ வார்த்தை என்றால், இதோ இந்த வாளுக்கு மறுமொழி கூறும். சோழச் சக்கரவர்த்திகளுக்கும் எனக்கும் பலவித மனத்தாங்கல் உண்டு. அதனால் என் மகள் அவனி முழுதுடையாளைக் காண்பதற்கு ஒரு தடவை கூடப் பழையாறைக்குச் செல்லவில்லை. சோழ நாட்டு பட்டத்தரசியாக என் மகள் தானிருந்திருக்க வேண்டும். அந்த விஷயத்தில் எனக்கேற்பட்ட கோபம் தணியவே இல்லை. படைகளைத் திரட்டி மன்னரைப் போருக்கு இழுக்கவும் திட்டமிட்டேன். ஆனால், ஒரு சமயம் வாரிசற்ற அவரை நினைக்கும்போது பரிதாபமாக இருக்கும். அவரது செய்கையை மறந்து மன்னித்து விடத் தோன்றும். உலகெலாம் காக்கும் எங்கள் குலதெய்வம் திரு நாராயணப் பெருமானை நான் பிரார்த்திக்காத நாளில்லை. என் பிரார்த்தனை பலித்தது. என் மகள் கருவுற்றிருக்கிறாள் என்ற செய்தி கிடைத்தது. ஆறு மாதங்களுக்குப் பிறகுதான் அந்த நல்ல செய்தி எட்டியது. என் மீதுள்ள கோபம் என் மருமகரான, சோழ சக்கரவர்த்திக்கு மாறவில்லை என்பது, என் மகளைச் சந்திக்கச் சீர்வரிசைகளுடன் நான் வந்த போது தெரிந்தது. என் மகளை - சோழ அரசியைக் — காணவும் அவர் அனுமதிக்கவில்லை. என் மகள் பழையாறையில் இல்லை என்பதும் தெரிந்தது. தாங்க முடியாத கோபத்தை நான் அடக்கிக் கொண்டேன். ஆண் குழந்தையாகப் பிறக்க வேண்டும் என்று பெருமானை வேண்டிக் கொண்டேன். என் பிரார்த்தனைக்கு நாரணன் மீண்டும் செவி சாய்த்தார். ஆண் குழந்தை பிறந்த செய்தியும் பல திங்கள் கழித்தே எனக்குத் தெரிந்தது. சக்கரவர்த்தி மீதுள்ள கோபம் பறந்தோடி விட்டது. சோழ நாட்டுக்கு வாரிசு பிறந்து விட்டான்: மலையமான் குலக் கொழுந்து ஆண் குழந்தையைப் பெற்றளித்து விட்டாள் என்று மகிழ்ந்தேன். பொன்னும் மணியும், பட்டாடையும் சீர்வரிசையாக எடுத்துக் கொண்டு கங்கை கொண்ட சோழபுரம் சென்றேன். ஆனால் என் மகளைப் பார்க்க முடியவில்லை. எனதருமை குறுநில மன்னர்களே! அந்தச் சோகக் கதையை விவரிக்க விரும்பவில்லை. என் மகள் மற்றொரு ஆண் குழந்தையையும் பெற்றாள். பெற்ற பிறகு இவ்வுலகை விட்டே மறைந்து விட்டாள் என்ற செய்தியும் எனக்குப் பல நாட்கள் கழித்தே கிடைத்தது. பெற்ற மகளின் ஈமச்சடங்குக்கு அழைக்காத சோழ அரசன் ஓர் அரசனா? நேரே சந்தித்து என் கோபத்தைப் புலப்படுத்தவே இங்கு வந்தேன். உங்கள் அனைவரையும் போல் இளவரசுப் பட்டத்துக்குப் போட்டியிட அன்று. நான் சக்கரவர்த்தியுடன் வாதிடுவது பிறகு இருக்கட்டும்; சோழ குல வாரிசாக இரு குழந்தைகள் பிறந்திருக்கும்போது நீங்கள் எல்லாம் என்ன திட்டமிடுகிறீர்கள்? உங்களுடைய பிள்ளைகளுள் ஒருவனை இளவரசராக்க அரசரிடம் வற்புறுத்தப் போகிறீர்களா? என்ன நியாயமிது? அநியாயத்தைப் பற்றிப் பேசவா நாம் இங்கு கூடியுள்ளோம். அதற்கு ஒரு விருந்து இசை, நாட்டிய நிகழ்ச்சிகள்..'' மலையமானின் வார்த்தைகள் தணல் துண்டங்களாக விழுந்து, அங்கு இதுவரை நிலவிவந்த இனிய சூழ்நிலையை மாற்றின.

பயங்கர அமைதி குடி கொண்டது. ஒருவரும் பேசத் துணியவில்லை. அப்போதுதான் மண்டபத்துக்குள் நுழைந்த பெருமான் நம்பிப் பல்லவரையர், ''வாரிசுக்குப் போட்டியிட யோசனை கூறத் தங்களை எல்லாம் நான் இங்கு அழைக்கவில்லை; எனது மதிப்புக்குரிய சம்புவரையரே, கடம்பராயரே, காடவராயரே, சக்கரவர்த்திகளுக்குத் தெரியாத

---

ஒரு கிராமத்து ஜனங்கள் கூடி நவீன ஊர்வலம் சென்றார்கள். ஊர்வலத்தில் சகல மரியாதைகளுடன் மதுபான பாட்டில்கள், ரூபாய் நோட்டுக்கள், புடவைகள், வளையல்கள், 'பிரா'க்கள், உயிருடன் ஒரு கோழி — ஆகியவை எடுத்துச் செல்லப்பட்டன. கடைசியில் அவையெல்லாம் ஒரு கூட்டுறவு அதிகாரியின் அறை வாசலில் வைக்கப்பட்டன. பிறகு கோஷங்கள் எழுப்பப்பட்டன. — காரணம் அந்த அதிகாரி லஞ்சம் வாங்குகிறார் என்றும், ஊழல் பேர்வழி என்றும் மக்கள் கருதியதுதான். இந்த உண்மைச் சம்பவம் மஹாராஷ்டிரத்தில் கோல்ஹாப்பூர் மாவட்டத்தைச் சேர்ந்த ''டாப்''பூர் என்ற கிராமத்தில் நிகழ்ந்தது.

- தகவல் பி. எஸ். ஜெயராமன்
- டைம்ஸ் ஆஃப் இந்தியா



யோசனையையா, நாம் தெரிவிக்கப் போகி றோம். மதிப்புக்குரிய மலையமான் மகள், சோழ நாட்டுக்கு வாரிசை அளித்து விட்டுச் சென் றிருப்பது முக்காலும் உண்மை. நாளைக்கே அக்குழந்தைக்கு இளவரசுப் பட்டம் சூட்ட முடியுமா? பிஞ்சுக் குழந்தைகள் தலையில் மகு டம் கவிழ்க்க முடியுமா? சொல்லுங்கள்'' என்றார்.

சபை மண்டபத்தில் ஒருவரிடமிருந்தும் மறுமொழி வரவில்லை. பெருமான் நம்பியே பேசினார்:

''இரு குழந்தைகளும் பிறந்த வேளை சரி யில்லை என்று கேசவசாமி சொல்லி விட்டார். குழந்தைகளுக்கு ஆபத்து ஏதாவது நேரலாம் என்றும் கூறியுள்ளார்'' என்று கூறும்போது மௌனமாயிருந்த மண்டபத்தில் குரல்கள் பல பொங்கி எழுந்தன.

''ஆபத்தா! யாரிடமிருந்து, உடனே சொல் லுங்கள். சோழர்க் குலக் கொடியைச் சிதைக்க முயல்பவர் யார்...'' என்று ஒரே சமயத்தில் பலர் முழங்கினர்.

''யார் என்று இப்போது நான் சொல்ல விரும்பவில்லை. அப்படி ஆபத்து ஏற்படுத்த முயல்பவரை நீங்களே அடையாளம் கண்டு பிடித்துத் தக்க தண்டனை அளியுங்கள்...'' என்றார் நம்பி.

''உறுதியுடன் செய்வோம். சோழர்குல வாரிசு நீடூழி வாழ்க! சோழச் சக்கரவர்த்தி நீடூழி வாழ்க!'' என்று பலகுரல்கள் எழுந்தன.

''பெரியவர்களே! பொறுப்புள்ளவர்களே! மிகவும் மகிழ்ச்சி! குழந்தைகள் பெரியவர்க ளாகும் வரை அவர்கள் சார்பில் இளவரசுப் பொறுப்பை ஏற்க யாராவது முன்வர வேண் டாமா? நீங்களே ஒன்றுகூடி ஒருவரது பெயரைச் சொல்லுங்கள். அவருக்கு மகுடம் கவிழ்த்து இளவரசுப் பட்டம் உடனே சூட்டு வோம். ஆனால், இளவரசராக வரப் போகிற வர் எந்த நொடியும் குழந்தைகளுக்காக ஏற்றுக் கொண்ட உரிமையை விட்டுக் கொடுக்கச் சித்தமாக இருக்க வேண்டும். எந்தக் கணத்திலும் இளவரசுப் பட்டத்தைத் துறக்கத் தயாராக இருக்க வேண்டும். யார் வருகிறீர்கள், சொல்லுங்கள். உடனே சொல் லுங்கள். உங்கள் கருத்தை அரசரிடம் சென்று தெரிவிக்கிறேன்'' என்று பெருமான் நம்பிப் பல்லவரையர் நாற்புறமும் திரும்பிக் குறுநில மன்னர்களைப் பார்த்துக் கேட்டார்.

ஒருவரிடமிருந்தும் மறுமொழி வரவில்லை.

''நான் சொல்லட்டுமா? இளவரசுப் பட் டம் ஏற்றுக் கொள்ளத் தகுதியானவர் பெயரை நான் இப்போது சொல்லட்டுமா?'' என்று பெருமான் நம்பி கேட்டார்.

''சொல்லுங்கள், சொல்லுங்கள்'' என்று குரல்கள் எழுந்தன.

சற்று மௌனமாயிருந்த பெருமான் நம்பி, இளவரசுப் பட்டம் சூட்டத் தகுதியானவரின் பெயரைத் தெரிவித்தார். சிறிதுநேரம் மௌனமாயிருந்த குறுநில மன்னர்கள், தங்க ளுக்குள் மெல்லிய குரலில் பேசத் தொடங் கினர். ஒருவர்க்கொருவர் மெல்லிய குரலில் பேசுவதே பெரும் ஒலியாக, வியப்பும் திகைப் பும் நிறைந்த ஒலியாகச் சபை மண்டபத்தில் எதிரொலித்தது.

(தொடரும்)

எந்த சகுனத்தையும் நம்பாத நான் ஒரே ஒரு சகுனத்தை மட்டும் நம்புவேன்: பயப்படுவேன் என்று கூடச் சொல்லலாம்.

என் அருமை மனைவி கமலாவுக்குத் தொச்சு என்று மகா அருமையான தம்பி இருக்கிறான். அவனது மகாமகா அருமையான சகதர்மிணி என் வீட்டுக்கு விஜயம் செய்தால் எனக்கு ஏதோ ஒரகக் கோளாறு என்பது உறுதி!

அவனுடன் நண்டும் சிண்டுமாக நாலைந்து வால்கள் வந்து என் வீட்டு சோபாவைப் பாழடித்து ஜன்னல் கண்ணாடிகளை விபூதி அளவுக்குப் பொடி பண்ணி, டிராயிங் ரூம் சுவரில் பல அருமையான 'டிராயிங்குகள்' போட்டு நாசமடையச் செய்வது மட்டுமல்ல; தொச்சுவின் மனைவி ஏதாவது புது புடைவையைப் பற்றியோ, பாத்திரச் சீட்டு பற்றியோ, சபாவில் நடக்கப் போகும் புது நாடகத்தைப் பற்றியோ வத்தி வைத்து விட்டுப் போவாள். ஆகவே அவள் வந்தால் பின்னாலேயே எனக்குச் செலவு வரும் என்பது நிச்சயம்.

அப்படித்தான் அன்று ஆபீசுக்குக் கிளம்பிக் கொண்டிருக்கும் போது ஒரு சின்ன பெஞ்சில் எவர்சில்வர் டப்பாவுடன் எதிரே வந்தாள் தொச்சுவின் 'அச்சுப்பிச்சு!'

டப்பாவில் பிரண்டைத் துவையல் இருக்கும்; போகும் போது காலி டப்பாவைக் கொடுக்கக் கூடாதே என்று என் அருமை மாமியார் ரவாகேசரி பண்ணி அடைத்துக் கொடுத்து அனுப்புவாள்!

அவள் வந்து சென்ற பிறகு என் மனைவி என்னிடம் சொன்னாள்: ''பேப்பர் படிக்கிறீங்களே என்ன பிரயோஜனம்? பட்ஜெட்டில் டெலிவிஷன் செட் விலையெல்லாம் குறைஞ்சிருக்குதாமே?''

''குறைஞ்சால் என்ன? யானை விலை கூட முன்னைக்கு இப்போ. பத்து ரூபாய் மலிவு ஆகி விட்டது.''

இந்தச் சமயம் என் அருமை மாமியார் கதவிடுக்கில் நின்றபடி — கதவிடுக்கில் அகப்பட்ட எலியின் குரலைத் தூக்கியடிக்கும் குர



வினிமையுடன் — ''அடியே கமலா — நீ ஒன்னு கேட்டால் அவர் ஒன்னு சொல்றார்... பானை, யானை என்று... ஏதாவது பேச்சை ஆரம்பிச்சு ஏச்சைத்தான் வாங்கிக் கட்டிக்கிறே'' என்று மையமாகச் சொன்னாள்.

நான் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாததுபோல், ''யெஸ். கமலா... டி. வி. சீப்பாக ஆகிவிட்டால் உடனே வாங்கிவிட வேண்டுமா?'' என்றேன்.

''நீங்க வாங்கவும் வேண்டாம்; விக்கவும் வேண்டாம்... நல்ல நல்ல படமாகப் போடறாளும்... தொச்சுவின் ஒய்ஃப் சொன்னாள், வாராவாரம் படம் பார்க்கிறாளாம். அப்புறம் ஒளியும் ஒலியுமாம்.!...''

''அடி சக்கைன்னானும்... தொச்சு எப்போ டி. வி. வாங்கினான். தெரியவே தெரியாதே!''

''அவன் வாங்கலை. மாடி போர்ஷன்காரர் வாங்கியிருக்கிறாராம்.''

''அப்படி என்றால் அவரை வேண்டுமானால் நம் வீட்டு மொட்டை மாடிக்குக் குடித்தனம் வரச் சொல்லி விடலாமே'' என்றவன் தொடர்ந்து ''கமலா, டிவி என்றால் கனையாக மூவாயிரம் நாலாயிரம் என்று வைக்க வேண்டும்'' என்று இழுத்தேன்.

''ஆமாம். போன வருஷம் உங்க அக்கா சரோஜா முக்காலணா கார்டில் மொக்கை பென்சிலில் 'விதை நெல் வாங்கணும். இரண்டாயிரம் அனுப்புடாப்பா' என்று எழுதினாளே அப்போ கனையாகப் பணம் அனுப்பலையா?''

''அடி கமலா அது கனையில்லை... முழுக... நான் சொல்கிறேன். நீ ஏன் அவரோடு மல்லுக்கு நிற்கிறே?'' — மாமியார்.

''கமலா நீ மல்லுக்கும் நிற்க வேண்டாம்; லாங் கிளாத்திற்கும் நிற்க வேண்டாம்... உனக்கு டெலிவிஷன் செட் வேண்டும். அவ்வளவுதானே? என்ன செட் வாங்கலாம்?''

''தொச்சு சொன்னான், ஈ. சி. டிவி செட் நன்றாக இருக்கிறதாம்.''

''அவன் ஈஸியாகச் சொல்லி விட்டான். கஷ்டப்பட்டுப் பணம் கொடுக்க வேண்டியவன் நான் இல்லையா?''

''தொச்சு தலையை ஏன் உருட்டறீங்க? கமிஷன் போக வாங்கித் தருகிறேன் என்கிறான்.''

''அதாவது கமிஷன் தொகை, தொச்சுவின் பாக்கெட்டில் போவதற்கு, எனக்கு டிவி செட் வாங்கித் தருவான்!'' — இதை நான் உரக்கச் சொல்லவில்லை.

''சரி. கமலா. தொச்சுவிற்குச் சொல்லி அனுப்பு'' என்றேன்.

நாலைந்து நாட்கள் கழித்து என் வீட்டிற்குத் திரும்பிய போது என் வீட்டைச் சுற்றிப் பெரிய கூட்டம் நின்று கொண்டிருந்தது. அதில், பாதி, அரை டிக்கட்டுகள். எங்கிருந்தோ தொச்சுவின் குரல் கேட்டது: ''அக்கா: பெரிய ஏணி வேண்டுமே!''

''போங்க... போங்க... என்ன கூட்டம்? இங்கே என்ன டிராமாவா போடறாங்க'' என்று இரைந்து கொண்டே வீட்டுக்குள் நுழையப் போனேன்.

அப்போது ஒரு சிவப்பு முண்டாசு — துண்டு பீடி — பரட்டைத் தலையன். ''டேய் துரிஞ்

# டெலிவிஷன் அல்ல; துளி விஷம்!

''அகஸ்தியன்''



சனு... கேட்டியா... இப்பவே இம்மாம் சத்தம் போடுறாரே... நாளைக்குப் பொட்டி வந்துட்டால் இவரைப் புடிக்க முடியாது... ஹூம். இந்த மாதிரி ஆளுங்களுக்கு வாழ்வு வருது பார் அதைச் சொல்லு'' என்று சொன்னான்.

சட்டென்று விளங்கி விட்டது. டி. விக்கு என் மனைவியின் தம்பி ஏற்பாடு பண்ணி விட்டான்!

''கமலா... கமலா... டிவிக்கு ஆர்டர் கொடுத்து விட்டாயா என்ன? என்னை ஒரு வார்த்தை கேட்க வேண்டாமா? '' என்று இரைந்தேன்.

''என்ன அத்திம்பேரே...'' என்று குரல் கொடுத்தான் தொச்சு.

''அத்திம்பெருமாச்சு, சுத்திம் பெருமாச்சு. நீ ஒருத்தன் இருக்கும்போது கேட்டை, மூட்டை, செவ்வாய், ஏழரை நாட்டு சனி எதுவுமே எனக்கு வேண்டாம்.''

''ஏன், அவனைக் கரிக்கிறீங்க..? உங்களுக்கு உலகத்தில் நியூஸ் பேப்பர் இருந்தால் போதும். ஒரு நாள் பேப்பரை மூணு நாள் படிப்பீங்க... டிஸ்கவுண்ட் கிடைக்கிறதுன்னு தொச்சு.. அன்டென்னாவை வைச்சுட்டுப் போ — அத்திம்பேரைக் கேட்டு டிவி செட் எடுத்துக் கொண்டு வரலாம் என்று நான் தான் சொன்னேன்... தொச்சு... அந்த அன்டென்னாவைக் கழற்றி எடுத்துக் கொண்டு போ. எனக்கு டிவியும் வேண்டாம் ஒரு மண்ணும் வேண்டாம். வேளா வேளைக்கு அழுக்குத் துணிக்குச் சோப்புப் போட்டுத் தோய்த்துக் கொண்டு இரும்பு வாணலியைத் தேய்த்துக் கொண்டு காலத்தைத் தள்றேன்'' என்றாள்.

''முருகேசா...! எல்லாத்தையும் கழற்றப்பா'' என்று தொச்சு ஆகாயத்தைப் பார்த்துத் தர்மக் கூச்சலிட்டான்.

''இரு.. இரு... தொச்சு.. அவசரப்பட்டுக் கழற்ற வேண்டாம்... கமலா.. கோவிச்சுக் காதே... கையில் பணம் இல்லையே என்று பார்த்தேன்... தொச்சுவை...''

''அத்திம்பேரே... பணம் என்ன பிசாத்துப் பணம். நான் தருகிறேன். முப்பது பர்ஸெண்ட் தள்ளுபடியிலே கிடைக்கிறது. உங்களுக்குக் கசக்கிறதோ? இந்தக் கையில் வாங்கி அந்தக் கையில் கொடுத்தால் எனக்கு எழுநூறு எண்ணூறு நிக்கும்'' என்றான் அட்டகாசமாக.

இந்த டிவியிலும் அவனுக்கு அவ்வளவு தொகை கமிஷன் கிடைக்கும் என்று எனக்குத் தெரியும்.

''வெரிகுட்... தொச்சு... நீயே பார்த்து நல்ல செட்டாக செலக்ட் பண்ணிக் கொண்டு வந்து வெச்சுடு'' என்றேன்.

''உங்களுக்கு என்று இம்போர்ட்டட் வால்வு போடச் சொல்லியிருக்கேன்... முருகேசா.. கீழே இறங்கி வா... அத்திம்பேரே இந்த ஆளிடம் ஐந்து ரூபாய் பக்ஷீஸ் கொடுங்க'' என்றான் தொச்சு. சிறிது நேரத்துக்கு முன்பு, தானே டிவிக்குப் பணம் தருகிறேன் என்று சொன்ன பேர்வழி இப்போது ஐந்து ரூபாய் என்னைத் தரச் சொல்கிறான்!

''தொச்சு, டிவி எப்போ வரும்?''

''கேட்டியா அக்கா, அத்திம் பேர் சொன்னதை? ஒரு செக்கை முதலில் வெட்டுங்கள்.''

''பணத்தைக் கொடுக்காமல் டிவியை எங்கேயிருந்து கொண்டு வைப்பான் தொச்சு?'' என்று என் மனைவியின் பேச்சைத் தொடர்ந்து என் அருமை மாமியார், ''அடியே கமலா: சில பேர் இப்படித்தான்...'' என்று பீடிகையுடன் ஆரம்பித்தாள்.

நான் இடைமறித்து ''இந்தாப்பா செக்கு. உலக்கை எல்லாம்'' என்று சிரித்தபடி சொல்லி செக் எழுதிக் கொடுத்தேன்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த என் மனைவிக்கு வாயெல்லாம் பல். என் மாமியாருக்குப் பல்லில்லாததால், வாயெல்லாம் வாயாகப் புன்னகை வீசினாள். தொச்சுவின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. கமிஷன் என்று 400, 500 அவனுக்கு நிச்சயம் கிடைக்குமே!

அன்றுமாலை என் வீடு குழந்தைகள் கண்ட குடியரசாகக் காட்சி அளித்தது. டிவியில் படம் பார்க்க எங்கள் பேட்டையே திரண்டிருந்தது. வாசலில் இருந்த ரோஜாச் செடிகளையும் 'கிச்சன் கார்டனின்' செடிகளையும் மிதித்துப் பாழ்படுத்தி விட்டு வந்திருந்தன குழந்தைகள் படை!

''உங்களையெல்லாம் எந்த மடையன் கூப்பிட்டான்...? செடியெல்லாம் பாழ்...''

''பொட்டியிலே இன்னிக்கு பயாஸ்கோப்பு ஆச்சுங்களே'' என்றது ஒரு வால்.

இதற்குள் மற்றொரு வீரர், ''டேய்! ஏண்டா கத்தறீங்க... சைலண்டாக இருந்தால் உள்ளார படம் பார்க்க விடுவார் அய்யா!'' என்றான்.

''ஏய் பசங்களா, இன்னும் டிவியே வரவில்லே. முதல்லே நீங்க வந்துட்டீங்களே... போங்க... போங்க'' என்று எரிந்து விழுந்தேன்.

''ஏன் ஸார் புளுவறீங்க... மேலே தான் ஏரியல் கொம்பு கட்டியிருக்குதே. படம் பார்த்தால் என்ன உங்கள் டெலிவிஷன் தேய்ஞ்சா புடும்'' — இது மைனர் பையன் — வாயெல்லாம் பீடி மணத்துடன்.

இந்தச் சமயத்தில் ஒரு தொண்டு கிழவி. ''இந்த மாதிரி ஒதியமத்த ஆசாமிங்களுக்கு

---

'அம்ரோஹா' நகரைச் சேர்ந்த 'ஆப்கான்பூர்' பகுதியில் சமீபத்தில் ஒரு திருமணம் நடந்தது. இதில் மணமகன் வயது 30, மணமகள் வயது 75! நண்பர்களும், உறவினரும் நிறைய வந்திருந்து இந்த மணமக்களை வாழ்த்தினர்!

- சம்பத் குமாரி.



வாழ்வு வந்தால் தலைகால் தெரியாது... அந்த ஆண்டவனுக்குக் கண் இல்லையே. டேய், பயனி, வாங்கடா போவலாம். பெரிய ஆர்தர் ஒப் துரை மாதிரியில்லே இவனுக்கு நினைப்பு... வாங்கடா'' என்று நிந்தித்துக் கொண்டே போனான்.

''கமலா... எல்லாம் தொச்சுவால் வந்த வினை... டிவி செட்டையே காணோம். முதலில் அன்டென்னாவை வெச்சுட்டான்.''

''அவனை ஏன் கரிக்கிறீங்க? இந்த மாதிரி இடத்திலே வீடுகட்ட வேண்டாம் என்று அப்போது நான் சொன்னபோது என் பேச்சை கேட்கல்லே. இப்போ படுங்கோ அவஸ்தை'' என்றாள் கமலா. தொச்சு சொன்ன பிளாட்டை நான் வாங்கவில்லை என்ற கோபம் எத்தனையோ வருஷங்களாகியும் ஆறவில்லை!

அடுத்த ஞாயிற்றுக் கிழமையும் செட் வந்த பாடில்லை.

ஆனால் கிழவியும் துண்டு பீடி மைனரும் வகையறுக்களும் வந்து, செட் வரவில்லை என்று நான் சொன்னதை நம்பாமல், எனக்கு 'வாழ்வு' வந்திருப்பதாக இகழ்ந்து விட்டுச் சென்றார்கள். அத்துடன், வாயிற்புறத்தில் மிச்சம் மீதியிருந்த பூச்செடிகளைத் துவம்சப் படுத்திவிட்டுப் போனார்கள்.

இந்தச் சமயம் தொச்சு வந்தான்.

கைரிக்ஷாவில் டி. வி. செட் வந்து இறங்கியது. குழந்தையைத் தூக்குவது போல் தூக்கிக் கொண்டு வந்து மேஜை மேல் வைத்தான் தொச்சு. அன்டென்னா கம்பிகளை இணைத்தான். சுவிட்சைப்போட்டான். படம்வந்தது.

''என்ன ஸ்வாமிக்குத் திருப்தியா? அத்திம்பேரே நிம்மதியாகப் படம் பாருங்க. !... ஒரு ரகசியம். இது இண்டியன் செட் என்று பெயரே தவிர, வால்வுகள், டிரான்ஸ்பார்மர், காயில், பிக்சர் — ட்யூப் எல்லாமே இம்போர்டட்... ஸ்மக்கிள் பண்ணிக் கொண்டு வந்திருக்காங்க ஜப்பானிலிருந்து... சரி. நான் வரேன்... வரேன் அக்கா...'' என்று விடை பெறப் போனவனிடம் என் மாமியார், ''இந்தா தொச்சு. நாலு மைசூர் பாகு. பசங்களுக்குக் கொடு. புது டிவிசெட் வந்ததற்காக ஸ்வீட்'' என்று சொல்லிப் பெரிய தூக்கை அவனிடம் கொடுத்து அனுப்பினாள். என் வீட்டில் இருக்கும் போது என் மாமியாரைப் போல் எக்ஸ்போர்ட்டரைப் பார்க்கமுடியாது!

அடுத்த சில தினங்கள் டி. வி.யை விடாமல் பார்த்தார்கள் என் மனைவியும் மாமியாரும். கட்டுப் போட்டால் கூட இங்கிலீஷ் தெரியாத என் மாமியார் இங்கிலீஷ் நிகழ்ச்சிகளை விடாமல் பார்த்தாள். என் மனைவியோ, கரும்புச் சாகுபடி, பன்றி வளர்ப்பு போன்ற நிகழ்ச்சிகளையும் ஆர்வத்துடன் பார்த்துக் குறிப்பு எடுத்து வைத்துக் கொண்டாள்.

டிவி வந்ததிலிருந்து இரவுச் சாப்பாடு வெறும் சோறு — மோருதான்.

ஒரு வாரத்துக்குள் எங்கள் பேட்டை முழுவதும் செய்தி பரவி விட்டதால், சாயங்காலங்களில் என் வீடு நிரம்பி வழிய ஆரம்பித்தது.



குழந்தைகளைச் சிரிக்கச் செய்தாலன்றி அவர்களுக்குக் கல்வி கற்பிக்க முடியாது. சூரிய வெளிச்சம் விழுந்தாலன்றி ஒரு மரம் உயிர் வாழவோ, அதன் இலைகள் வளரவோ முடியாது. செடிகளுக்குச் சூரிய வெளிச்சம் எப்படியோ, அப்படியே குழந்தைகளுக்குச் சந்தோஷமாகும். எத்தனையோ ஆசிரியர்களை அமர்த்தலாம். மரத்தின்வேருக்கு நிறையத் தண்ணீர் வார்க்கலாம். ஆனால் சந்தோஷமின்றிக் குழந்தை வளர முடியாது. சூரிய வெளிச்சமின்றி மரம் வளர முடியாது.

— ராஜாஜி.

தகவல்: வி. ச. வாசுதேவன்

---

இடம் கிடைக்காது என்று முன்னமேயே வந்து ரிசர்வ் செய்தவர்களும் உண்டு.

படம் நடந்து கொண்டிருக்கும் போது ''மாமி, குடிக்கத் தண்ணீர் இருக்கா'' என்று கேட்டவர்களுக்கு சப்ளை செய்வதும், ''பாத்ரூம் எங்கே இருக்கு?'' என்று கேட்பவர்களுக்கு வழி காட்டுவதும், ''ஃபீடிங் பாட்டிலில் பாலைச் சுட வைத்துக் கொடுங்க'' என்ற கோரிக்கைகளைக் கவனிப்பதும், 'என்னடா சனியன், மாமி வீட்டுக் கார்ப்பெட்டிலேயே?' என்ற சாபங்களைக் கவனித்துச் சுத்தம் செய்வதும் என் மனைவிக்குப்போதும் போதுமென்றாகி விட்டது. உட்கார்ந்து படம் பார்க்க அவளால் முடியவில்லை. உட்கார இடம் இருந்தால் தானே, முதலாவது!

என் பூச்செடிகள் மட்டும் பாழாகவில்லை. சோபா செட், கார்ப்பெட், எல்லாம் நாசமடைந்தன. ஜன்னலில் வைத்திருந்த டார்ச் லைட், செருப்புகள், இரவலாக வாங்கிப் போன புத்தகங்கள் போன்ற பல அம்பேல் ஆகின.

படம் பார்த்துக் கொண்டிருக்கும் போது தடங்கல் என் செட்டில் ஏற்பட்டால்... ''...டேய்.. ஒறியமத்த செட்டுடா.. செகண்ட் ஹாண்டாக இருக்கும்'' போன்ற கமெண்டுகள் வேறு வீசப்படும்.

ஒருநாள் என் செட் கெட்டுப் போய் விட்டது. அம்மாடி என்று குஷியால் துள்ளிக் குதித்தேன்.

ரிப்பேருக்குக் கொடுத்தேன், நிதானமாக.

''சார், ஒரு வால்வு போயிடுச்சு. அது ஜப்பானிலிருந்துதான் வரணும்'' என்றார் மெக்கானிக்.

''அந்த ஜப்பான் கம்பெனி திவாலாகி விட வேண்டுமே'' என்று என்னையறியாமல் என் மனம் பிரார்த்தித்தது.

உண்மையைச் சொல்கிறேன் இன்னும் செட் ரிப்பேராகவில்லை. அதனால்தான் என்னால் இந்தக் கட்டுரையையே எழுத முடிந்தது.

டெலிவிஷன் 'செட்' அல்ல அது; என் மன அமைதி என்ற பாலில் ஒரு சொட்டு விஷம்!

# கனவா-நிஜமா? 18

கதை: வாண்டுமாமா
சித்திரம்: செல்லம்

தன்னைப் பற்றிய நினைவே இல்லாத மன்னர் வஜ்ரபாகுவின் விழிகளைக் குருடாக்கும்படி ஆணை பிறப்பித்ததும் தார்த்தாரிய வீரர்கள் மாஜி மன்னரை இழுத்துப் போகின்றனர்













சாம்பல்குமட்டில் விளையாடிக் கொண்டிருந்த கருமானின் குழந்தைக்குப் பின்னால் படமெடுத்துச் சீறி நின்றது நல்லபாம்பொன்று...
நாகசர்ப்பம்! குழந்தையைக் கொத்திக் கொல்லப் போகிறது!


சித்திரஹாஸன், தன் கையில் தகதகத்துக் கொண்டிருந்த சூட்டுக் கோலைக் குறிபார்த்து...
என் குறி என்றுமே தவறியது கிடையாது. இப்போது என் குழந்தையின் உயிரைக் காக்க, என் வல்லமை பயன் படட்டும்.
கருமானின் கையிலிருந்து விடுபட்ட, தணிந்து கொண்டிருந்த இரும்புச் சூட்டுக்கோல் படமெடுத்துத் தாக்கத் தயாராக இருந்த பாம்பை....


தக்க தருணத்தில் எச்சரிக்கை செய்து தன் குழந்தையைக் காப்பாற்றிய - கண்களை இழக்க வந்த கைதியிடம் கருணை கொண்டான் கருமான் சித்திரஹாஸன். வீரர்களிடம் பேரம் பேசுகிறான்.
கூர்மையான பார்வையுடைய இம்மாயாபுரியான் என் உலைக் களத்துக்கு உதவியாக, மிகமிக உதவியாக இருப்பான். இவனை இப்படியே பார்வையைப் போக்காமல் என்னிடம் ஒப்படைத்தீர்களானால் உங்களுக்கு இவ்வொருவருக்கும் நூறு தினார்கள் பரிசாகத் தருகிறேன்.
ஆளுக்கு நூறு தினாரா? சபாஷ்! எடு பணத்தை எடுத்துக் கொள் இந்த மாயாபுரியானை!


சித்திரஹாஸனின் அடிமையாகி அவன் உலைக்களத்தில் சம்மட்டி அடிப்பவனாகப் பணிபுரிகிறார். தன் நாட்டு மக்கள் மீது படை எடுக்கப்போகும் தார்த்தாரிய வீரர்களுக்கான ஆயுதங்களை உருவாக்க உதவுகிறார் வஜ்ரபாகு.
உன் நாட்டுமக்கள் போருக்குத் தயாராகிறார்களா?
ஆமாம். எங்கள் மன்னர் தம் அண்டை நாடான மாயாபுரியின் மீது விரைவில் படையெடுக்கப் போகிறார். இந்த ஆயுதங்களும் அதற்காகத்தான்
தொடரும்



# ஒரு ரகசியம் இங்கே உறங்கிக்கொண்டிருக்கிறது!

சுசீலா சுப்புராமன்

அந்த மளிகைக் கடைக்கு முன் தன் செவர்லேயைக் கொண்டு நிறுத்தினான் முரளி. அவன் அந்தக் கடைக்கு ரெகுலர் கஸ்டமர். காரைக் கண்டதுமே மளிகைக் கடைப் பையன் இறங்கி ஓடிவந்தான்.

''இந்தாப்பா, நான் வந்து நாளியாச்சு. என்னாலே நிக்க முடியலே. எனக்கு முதல்லே கொடுத்து அனுப்புங்கப்பா.''

கிழவி ஒருத்தி கூட்டத்தில் நுழைய முடியாமல் ஓர் ஓரமாக நின்று ஈனசுரத்தில் குரல் கொடுத்தாள். அங்கிருந்த பரபரப்பில் அவளை யாரும் கவனிக்கவில்லை.

''எனக்குச் சீக்கிரம் கொடுத்தனுப்புங்கப்பா. உடம்புக்கு முடியலே.''

கடையில் நிலவியிருந்த பரபரப்பை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த முரளியின் காதில் அவளுடைய குரல் விழுந்தது. அவன் பார்வை அவள் இருந்த பக்கம் திரும்பியது.

எங்கோ, எப்போதோ பார்த்த முகம்!

காரை விட்டு இறங்கியவன், கடையின்முன் வந்து நின்று சற்றுநேரம் அவளையே பார்த்தான்.

அவனுக்குப் புரிந்து விட்டது.

''ஆயாவா? நீ எங்கே இங்கே வந்தே?''

அவள் அவனை உற்றுப் பார்த்தாள். அவளுக்கும் அவனை அடையாளம் கண்டுகொள்ள அதிக நேரமாகவில்லை. அவள் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது.

''யாரு, முரளியா? நீ நல்லா இருக்கியாப்பா? பெரியவனா வளர்ந்திட்டியே! ரொம்ப சந்தோஷம். கல்யாணம் எல்லாம் ஆயிடுச்சா?''

''ஓ!...'' என்றவன், ''வனிதா' இங்கே வாயேன்'' என்று குரல் கொடுத்தான்.

வனிதா காரிலிருந்து இறங்கி வந்தாள்.

''நான் அடிக்கடி சொல்வேனே, கொடைக்கானல்லே நான் படிக்கிறபோது ஒரு ஆயா இருந்தா; என்னைத் தன் பிள்ளை மாதிரி நல்லாக் கவனிச்சுக்குவான்னு. — அந்த ஆயாதான் இவங்க.''

''அப்படியா! ரொம்ப சந்தோஷம். இவங்க உங்களை மறக்கிறதேயில்லே. எப்பவும் உங்களைப்பத்திச் சொல்லிக்கிட்டே இருப்பாங்க.''

கிழவியின் முகத்தில் பெருமிதம்.

''ஆயா! நான் அந்த ஏரியிலே விழுந்தப்போ நீ காப்பாத்தினியே, அதை எங்க மாமாகிட்ட சொன்னேன். அவர் உன்னைப் பார்க்கணும்னு வந்தார். அதுக்குள்ள நீ வேலையை விட்டுப் போயிட்டே. எங்கே இருக்கேன்னும் தெரியலே. ஏமாற்றமாத் திரும்பி வந்திட்டோம்.''

''ஆமாம்பா, என்னாலே அதிகமா வேலை செய்ய முடியலே. நானுத்தான் போறேன்னு சொல்லிட்டு வந்திட்டேன்.''

''அதெல்லாம் இருக்கட்டும். இப்ப எங்கே இருக்கே? என்ன செய்யறே? அதைச் சொல்லு.''

''அங்கே இருந்து வந்ததிலேருந்து இங்கே தாம்பா இருக்கேன். அடுத்த தெருவிலே அந்தக் கடைசியிலே ஒரு குடிசை இருக்கே, அதிலேதான் வடைபோட்டு வித்து ஜீவனம் பண்ணிட்டு இருக்கேன்.''

அவன் அவளைத் தன் வீட்டிற்கு வரும்படி அழைத்தான். அவள் பிறகு ஒருமுறை வருவதாகச் சொன்னாள்.

ஆயாவுக்கு இரண்டு தினங்களாக உடல் நலம் சரியில்லை. ஜுரம் கண்டிருந்தது. முரளி டாக்டரை அழைத்து வந்தான். பூரண குணமடையச் சில நாட்கள் ஆகலாம் என்று தோன்றவும், அவளை வற்புறுத்தித் தன் வீட்டிற்கு அழைத்து வந்து விட்டான். நான்கைந்து தினங்கள் அவளுக்கு நல்ல ஓய்வு. சற்று குணமடைந்தவள்போல் காணப்பட்டாள்.

முரளி தன் பங்களாவை அவளுக்குச் சுற்றிக் காண்பித்தான்.

பங்களாவைச் சுற்றி அழகிய தோட்டம். அவற்றைப் பராமரிக்க வேலையாட்கள். அனைத்தையும் பார்த்துப் பிரமித்துப் போனாள் அவள்.

அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் டெலிபோன் மணி அடிக்கத் தொடங்கவும், அவன் விரைந்து சென்றான். அவள் அவனைத் தொடர்ந்து வந்தாள்.

ஹாலின் மேற்கூரையை அவள் கண்கள் வியப்போடு பார்த்தன. வாசலுக்கு நேர் மேலாக மாட்டப் பட்டிருந்த பெரிய படம் அவள் பார்வையில் பட்டது. படத்தில் இருந்த அந்தக் கம்பீரமான மனிதரைக் கண்டதும் நினைவில் ஒரு மின்னல் பளிச்சிட்டது. சுற்றுமுற்றும் பார்த்து விட்டு மீண்டும் அதில் கண்களைப் பதித்தாள்.

'ஆம். நித்தியானந்தமேதான்!'

பார்வை அங்கே நிலைத்திருக்கையில், இளமைப்பருவத்து நிகழ்ச்சிகள் சங்கிலித் தொடர்களாய் அவளைச் சுற்றிச் சுற்றி வந்தன.

மதுரையில் வடக்கு ஆவணி மூல வீதியில் ஒரு பங்களாவில் வேலை பார்த்து வந்தாள்

கண்ணம்மா: அந்த வீட்டில் ஒரு வயோதிகத் தம்பதி மட்டுமே வசித்து வந்தனர். அவர்களுடைய மகன் வெளிநாட்டில் இருந்தான்.

வீட்டு வேலைக்காரி என்பதைவிட வீட்டு நிர்வாகி என்பதே கண்ணம்மாவுக்குப் பொருத்தமாக இருக்கும். வீட்டு வரவு, செலவு, கடை கண்ணிக்குப் போவது எல்லாமே அவள்தான். அந்த அளவுக்கு அவர்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாய் விளங்கினாள் அவள்.

நித்தியானந்தத்தின் காய்கறிக் கடையில் தான் அவள் தினமும் வீட்டுக்குத் தேவையான காய்கறிகள் வாங்குவது வழக்கம்.

அவனுக்கு வாடிக்கையாளர்கள் அதிகம். அவர்களில் கண்ணம்மாவும் ஒருத்தி.

நாளாவட்டத்தில் அவர்களுக்குள் ஏதோ ஓர் இணக்கம் உண்டாவதை இருவரும் உணர்ந்தனர். சின்னச் சின்ன சம்பவங்கள், அர்த்தமற்ற சில ஜாடைப் பேச்சுக்கள், அர்த்தமுள்ள பார்வைகள், இனம் புரியாமல் ஒருவர்மீது ஒருவருக்கு ஏற்பட்ட பற்றுதல் இவற்றின் மூலம் ஒருவர் இதயத்தில் ஒருவர் கொஞ்சம் கொஞ்சமாக இடம் பிடித்துக் கொள்வதை அவர்களால் தடுக்க முடியவில்லை.

இப்போதெல்லாம் அவள் காய்கறி வாங்க வந்தால், கூட்டமாக இருக்கும்போது அவனிடம் அதிகம் பேசுவதேயில்லை. தனியே சந்திக்கும்போது அந்தரங்கங்களைப் பரிமாறிக் கொண்டனர். அப்போது அவனிடமிருந்து வரும் வாக்குறுதியாலும், செவிகுளிரப் பேசும் கேலி மொழிகளாலும் முகம் நாணித் தலை குனிந்தபடி அவனை ஓரக்கண்ணால் பார்த்துப் பரவசம் அடைவாள் கண்ணம்மா. அந்த நாணத்திலும், அவனைக் காணத் துடிக்கும்



கண்களை அவளால் கட்டுப்படுத்த முடிவதில்லை. அவள் அவனை விழிமலர்ந்து பார்க்கும் போது, செவ்விதழ்களில் குறுநகை கொஞ்சி விளையாடும்.

நித்தியானந்தம் தம் எண்ணத்தை அவளுடைய பெற்றோரிடம் சொல்லி அவர்களின் எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் திருமண ஏற்பாட்டைச் செய்யத் துணிந்து விட்டதை அறிந்த அவளுடைய உள்ளத்தில் அவன் தெய்வமாகவே காட்சியளித்தான்.

அன்று வானம் மப்பும், மந்தாரமுமாக இருந்தது. காய்கறிக் கூடையோடு வெளியில் வந்த கண்ணம்மா, நித்தியானந்தத்தின் கடைக்கு வந்ததும் அவனை நன்றிப் பெருக்குடன் பார்த்தாள். அந்தப் பார்வை அவனுள் ஏதோ ஒரு வகைக் கிளர்ச்சியை ஏற்படுத்தி விட்டது. அவனும் அவளை இமைக்காமல் பார்த்தான். இருவரும் பார்வையில் ஒருவரை ஒருவர் விழுங்கிக் கொண்டிருந்தனர். இயற்கையும் தன் பங்கிற்கு மகிழ்ச்சி தெரிவித்தது. வானம் லேசாகப் பன்னீர் தெளிக்க ஆரம்பித்தது. நேரம் நழுவிக் கொண்டிருந்தது.

லேசாகத் தூறிக் கொண்டிருந்த மழை சற்று வலுக்க ஆரம்பித்தது. காற்றின் சுழற்சி கடையினுள் நீர்த் திவலைகளை வேகமாய் வீசியடித்தது. மேலே போடப்பட்டிருந்த பெரிய தார்ப்பாயை எடுத்துக் கடையின் முன் பகுதியை மறைத்தான் நித்தியானந்தம். அவனுக்கு ஒத்துழைக்கையில் அவர்களுக்கிடையே ஏற்பட்ட கரங்களின் ஸ்பரிசத்தால் கண்ணம்மாவின் உடல் ஒருமுறை சிலிர்த்தது. அவள் வேகமாய்ப் பின்வாங்கிக் கொண்டாள்.

மழை பெய்து கொண்டிருந்தது.

உள்ளே ஒரே இருட்டு.

இரண்டு நிழல் பிம்பங்களைப் போல் இருவரும் காணப்பட்டனர். அந்தத் தோற்றம் அவன் உணர்வைத் தட்டியெழுப்பியிருக்க வேண்டும். தனிமையும் அதற்குத் தூபமிட்டது. அவளை ஏக்கத்தோடு பார்த்தான். பார்வையில் பல அர்த்தங்கள் பிரதிபலித்தன. ஏதோ ஒரு வெறி அவனை ஆட்டுவித்துக் கொண்டிருந்தது.

''கண்ணம்மா!...'' ஏக்கத்தின் தொனி வார்த்தையில் இழையோட அவன் அவளை மெல்லிய குரலில் அழைத்தான்.

''வேண்டாங்க...'' கெஞ்சும் பாவனையோடு அவள் சொன்னாள்.

''நான்தான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கப் போறேனே!''

''அதுவரை பொறுத்துக்குங்க.''

''இப்ப என் நிலைமையை நீ நினைச்சுப் பாத்தியா?''

''புரியுது. ஆனா என் நிலைமையையும் உணர்ந்து பார்த்ததாலே அதுக்கு மதிப்புக் கொடுக்க முடியாம இருக்கு.''

''அப்படியானா நீ என்னைச் சந்தேகிக்கிறியா?''

''இல்லே. சந்தோஷப்படுத்த முடியாம இருக்கேன்னு வருத்தம்தான் படறேன்.''

''என் உணர்ச்சியை நீ கொஞ்சமும் மதிக்கலே.''

''நல்லா மதிக்கிறேன். ஆனா, நம்ம நாட்டுப் பெண்களுக்குள்ள மதிப்பும் கெடக்கூடாதுன்னு நினைக்கிறேன்.''

''நான் இப்ப எப்படியும் உன்னை அடைஞ்சே ஆகணும்.''

மோகத்திரை பரிபூரணமாய் அவன் கண்களை மறைத்துக் கொண்டிருந்த அந்த நேரத்தில் அவளுடைய சொற்கள் விலைபோகவில்லை.

அவன் அவளருகில் வந்தான். அவள் மிரண்டு ஒதுங்கி வெளியேற எத்தனித்தாள்.

வெளியே மழை மூர்க்கத்தனமாய்க் கொட்டிக் கொண்டிருந்தது.

அவன் வெறி பிடித்தவனைப் போல வந்து அவள் கையைப் பற்றினான். அவள் தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றாள். அவன் பிடித்திருந்த பிடி இறுகிற்று. அவள் பலம் கொண்டமட்டும் ஒரு திமிறு திமிறினாள். எதிர்பாராமல் அவனுடைய முழங்கை அவளுடைய கன்னத்தில், தற்செயலாக நடக்கும் விபத்தைப்போல், 'பளார்' என்று அறைந்தாற் போல் பட்டது. அப்போது பளிச் சென்ற மின்னலுடன் இடியொன்று அருகில் எங்கோ விழுவது அவள் காதில் விழுந்தது.

அவன் கைப்பிடி சற்றுத் தளர்ந்தது. சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, அவள்

---

''இப்போதைய அரசியல்வாதிகள் சுதந்திரத்துக்குச் சற்றும் தகுதியில்லாத மக்களுக்குச் சுதந்திரம் அளிக்கக் கூடாது என்கிறார்கள். இது எப்படி இருக்கிறதென்றால், நீந்தக் கற்றுக் கொள்ளாத வரையில் தண்ணீர் பக்கமே போவதில்லை என்று ஒரு முட்டாள் நினைத்தாலும். அது போலத்தான் இருக்கிறது. சுதந்திரத்துக்குத் தன்னைத் தகுதியாக்கிக் கொண்ட பிறகு சுதந்திரம் பெற்றுக் கொள்ளலாம் என்று மனிதன் நினைத்தானானால் அவன் என்றுமே காத்திருக்க வேண்டியதுதான்.''

—டி. பி. மெக்காலே 1825ம் ஆண்டு எழுதியது.

ராமுசாமி.



வெளியேறி மழையில் நனைந்தபடி சென்று மறைந்தாள்.

நான்கு நாட்களாக அவள் அவன் கடைப் பக்கமே வரவில்லை. அவனைப் பார்க்கவேண்டும் என்ற ஆவல் உந்தியது. நடந்துவிட்ட நிகழ்ச்சி அவள் மனத்தைக் குடைந்தது. அவன் கோபத்தில் இருப்பான் என்ற பயம் நெஞ்சைச் சுட்டது. அன்று தப்பித்து விட்டதில் ஏற்பட்ட ஒரு நிம்மதியும் உள்ளத்தை ஒருபுறம் குளுமைப் படுத்தவே செய்தது.

அவன் கடைக்கு வந்து, தனிமைக்கான நேரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் கண்ணம்மா.

''அன்னைக்கு நடந்ததுக்கு நான் ரொம்ப வருத்தப்படறேன்.''

''நான் சந்தோஷப்படறேன்!'' கோபக் குமுறல் அவனிடமிருந்து வார்த்தைகளாய் வெளிவந்தது.

''என்மேலே தப்புன்னு என்னை மன்னிச்சிடுங்க.''

''இல்லே, என்மேல்தான் தப்பு. கண்டவளையெல்லாம் கையைப் பிடிச்சு இழுக்க நான் யாரு?...''

''கண்டவள்னு சொல்லாதீங்க. உரிமை உள்ளவள்தான்.''

''எனக்கு உரிமை உள்ளவள் என் காலிலே விழுந்தாப் போதும். தெருவிலே போறவ எல்லாம் என் காலிலே வந்து விழவேண்டாம். வேறு யாரும் நல்லவனாகப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக்க. நானும் வேற ஏற்பாடு பண்ணிட்டேன்.''

அவள் அதிர்ச்சியில் நிலைகுலைந்து போனாள். சிறிது நேர மௌனத்திற்குப் பின், ஏமாற்றத்தின் எல்லையிலிருந்து பேசினாள்.

''நான் இதுவரைக்கும் எந்த ஆம்பிளையையும் மனசால நினைச்சதோ, ஏறெடுத்துப் பார்த்ததோ கிடையாது. உங்களை மனசார விரும்பிட்டேன். நீங்க ஏத்துக்கலேன்னு வாழ்க்கை பூராவும் இப்படியே இருந்திட்டுப் போறேன். யோசிச்சு நல்ல முடிவாச் சொல்லுங்க. நான் அப்புறமா உங்க கோபம் தணிஞ்சதும் வரேன்.''

அவள் இறங்கி நடந்தாள்.

''நீ திரும்பவும் இங்கே வர வேண்டாம். இதுதான் என் முடிவு!''

அன்பு சுரக்கும் இதயம்தான் அவனுடையது. ஆனால் இன்று?... பிடிவாதமும், வறட்டுக் கௌரவமும் ஒன்று சேர்ந்து அந்த இதயத்தைப் பாறையாக்கி, இறுக்கி, இத்தகைய பதிலை அவள்மீது வீசின.

அதற்கு இரண்டு தினங்களுக்குப் பின் அப்பேதையின் மனத்தில் ஒரு நப்பாசை. அவன் கடைப்பக்கம் வந்தாள். அவனுடைய நிலையில் மாற்றமில்லாததை அறிந்து வேதனையோடு திரும்பி விட்டாள்.

அவளுக்கு அவ்வூரில் இருக்கப் பிடிக்கவில்லை. இதயத்தில் ஏதோ குடைந்தது. மனம் கனத்தது. வேலை செய்யவோ, உணவு உட்கொள்ளவோ முடியவில்லை. தஞ்சையிலுள்ள அவளுடைய தூரத்து உறவினர் வீட்டில் சில நாட்கள் இருந்தாள். அங்கும் நடந்து



''இதுக்கு முன்னே எங்கே வேலை பார்த்தீங்க?''

''ஏர் போர்ஸிலே.''

''அட, ஏன் அந்த வேலையை விட்டீட்டீங்க?''

''நான் விடலே; அவங்கதான் அனுப்பிச்சுட்டாங்க.''

''ஏனாம்?''

''ஒரு சமயம் ரொம்ப உயரத்திலே ஒரு ஹெலிகாப்டரில் பறந்துகிட்டிருந்தேன். ரொம்பக் குளிரா இருந்தது. இவ்வளவு குளிருதே, மேலே எதுக்கு இத்தனை பெரிய 'ஃபேன்' என்று நினைத்து அதை ஆஃப்பண்ணிட்டேன். அதுதான் காரணம்.''

'சக்கரம் சுழல்கிறது' நாடகத்திலிருந்து

ராமு.

போன நிகழ்ச்சிகளும், ஈடேற முடியாமற் போன ஆசைகளும் அவனைச் சித்திரவதை செய்து கொண்டிருந்தன.

தஞ்சையில் அவளுக்கு அறிமுகம் ஆன ஓர் ஆங்கிலோ இந்திய மாதுவின் சிபாரிசால், கொடைக்கானலில் ஒரு ஹாஸ்டலில் ஆயாவாக வேலையில் சேர்ந்து விட்டாள்.

அங்கிருந்த சிறுவர், சிறுமியரின் கபடமற்ற பேச்சையும், குறும்புத்தனமான விளையாட்டுக்களையும், துறுதுறுத்த கைகளையும் அவள் ரசித்தாள். அங்குள்ள சூழ்நிலையும் அவளுக்குச் சற்று ஆனந்தத்தை அளித்தது. கொஞ்சம் கொஞ்சமாகப் பழைய சம்பவங்களை மறந்து, நாளாவட்டத்தில் ஒரு மாறுதல் வாழ்க்கையை மேற்கொண்டாள். எத்தனையோ சிறுவர் சிறுமியருக்கு அவள் தாயாகவும் ஆயாவாகவும் இருந்து கவனித்து ஆளாக்கி விட்டாள். அதில் ஒரு நிறைவும் கண்டாள். அவர்களில் ஒருவன்தான் முரளி.

முப்பது ஆண்டுகள் உருண்டோடி விட்டன.

நித்தியானந்தத்தின் வயோதிகத் தோற்றம்தான் அந்தப் படம் என்றாலும், அந்த முகச்சாயல் அவளுக்குச் சட்டென்று காட்டிக் கொடுத்து விட்டது. எவ்வளவு நாட்களாய் அவள் இதயத்தில் வைத்துப் பூஜித்த முகம்! எங்கு திரும்பினாலும் அவர் முக பிம்பத்தைக் கண்டவள் தானே அவள்! அவருக்குத் தலை சற்று வழுக்கை விழுந்திருக்க வேண்டும். படம் தெளிவு படுத்திற்று.

அவன் மட்டுமென்ன?

காலம் தன் கோர நகங்களால் அவளைப் பிராண்டி விட்டிருந்தது. உழைத்து உருக்குலைந்த தேகம். முற்றிலும் சோகமாய் எழுதப்பட்ட வாழ்க்கைச் சரிதத்தின் கடைசி அத்தியாயத்தில் இருந்தாள் அவள். அவளுடைய கை கால்கள் நடுங்கிக்கொண்டிருந்தன.

''என்ன, ஆயா! அந்தப் படத்தையே பாக்கறே? அதுதான் என் மாமா. என்னை வளர்த்து ஆளாக்கியவர்.'' உள்ளேயிருந்து வந்தான் முரளி.

''இந்த வீடு, ஆஸ்தி எல்லாம் அவருடையதுதான். ம்... போயிட்டார்.''

குதூகலமாய் வந்த முரளி இதைச் சொல்லிவிட்டுச் சோகமாய் அவளருகில் நின்றான்.

கண்ணம்மா அதிர்ச்சியால் தாக்குண்டாள். அவள் இதயமும் ஒருமுறை குலுங்கிற்று.

உள்ளேயிருந்து காப்பி கலந்துகொண்டு வந்தாள், வனிதா!

''ஆமா, பாட்டி! இரண்டு மாசம் ஆச்சு. அவர் போயி. இதோ இந்த ஈஸிசேர்ல படுத்திருக்கும்போது தான் உயிர் பிரிஞ்சிட்டுது.''

வனிதா அங்கிருந்த ஈஸிசேரைச் சுட்டிக் காட்டினாள்.

''அதோ! அதுதான் அவர் சின்ன வயசிலே எடுத்த போட்டோ!''

வலதுபுறம் இருந்த வாசற்படிக்குமேலே மாட்டப்பட்டிருந்த படத்தைப் பார்த்தாள் ஆயா. எழுந்து இரண்டு அடி எடுத்துவைத்து உன்னிப்பாகக் கவனித்தாள். அவள் இதயத்தில் மறைந்திருந்த அந்த உருவம் தூசு துடைக்கப்பட்ட கண்ணாடி மாதிரி துல்லியமாகத் தெரிந்தது.

'போயிட்டீங்களா?...'

சோகம் அவளது நெஞ்சைக் கனமாய் அழுத்திற்று.

''அவர் எவ்வளவோ சம்பாதித்தார். ஆனா அவர் வாழ்க்கையிலே நிம்மதியே இல்லாமப் போச்சு, ஆயா.''

முரளி சொல்லிக் கொண்டே போனான்.

அவள் அவனைப் பார்த்தாள்.

''ஆமா, ஆயா! அவர் மதுரையிலிருக்கும் போது ஒரு பெண்ணைக் காதலிச்சாராம். அவ ரொம்ப நல்லவளாம். ஆண்களைக் கண்டாலே நெருப்பா இருந்த அவ, இவர் மேலே ரொம்பப் பிரியமா இருந்தாளாம். அவளுக்குத் துரோகமா ஏதோ நடந்துக்கிட்டாராம். அதுல நிம்மதி இல்லாமதான் என்னை எடுத்து வளர்த்தார். நான் அவரோட தங்கச்சி மகன். நான் வந்த பிறகும் அவர் கவலையைப் போக்க முடியலே.''

'நீங்க என் நினைவாகவே இருந்தீங்களா?... அது என் பாக்கியம்தான்...'

கண்ணம்மாவுக்கு உடல் இலேசாக நடுங்க ஆரம்பித்தது. சமாளித்துப் பார்த்தாள்.

''அவளை எப்படியும் கண்டு பிடிச்சிடலாம்னு அடிக்கடி மதுரைக்குப் போய்த் தெரிஞ்ச இடங்களிலெல்லாம் விசாரித்துப் பார்த்தார். பலனில்லே. ஒவ்வொரு தடவையும் அவர் ஏமாந்து போய் வருவதைப் பார்க்கப் பரிதாபமா இருக்கும்.''

'என்னை... என்னைத் தேடி அலைஞ்சீங்களா?...'

கண்ணம்மாவின் உடல் வியர்த்தது. படபடப்பு அதிகமாயிற்று.

''அவ எங்கே இருந்தாலும் என் நினைவாகத்தான் இருப்பா. அவ என்னைத் தொடச் சம்மதிக்கலேன்னாலும் மானசீகமா எனக்கு மனைவியாகத்தான் வாழுவான்னு அடிக்கடி சொல்வார். அவ நினைவிலேயே கடைசிவரை கல்யாணமே பண்ணிக்காமல் போய்ச் சேர்ந்திட்டார்.''

சொல்லிக் கொண்டே வந்த முரளி, கண்ணம்மாவின் முகத் தோற்றத்தில் ஏற்பட்ட மாறுதலைக் கண்டதும் திடுக்கிட்டான்.

''ஆயா!... என்ன செய்யுது உனக்கு?''

''ஒண்ணுமில்லேப்பா. ரெண்டு மாசத்துக்கு முன்னாலே ஒருநாள் என் நெஞ்சிலே ஏதோ அடிபட்டது மாதிரி வலிச்சது. இன்னைய வரைக்கும் அந்த வலி தீரலே. இப்ப ரொம்ப அதிகமா. இருக்கு'' என்றவள் நெஞ்சைப் பிடித்துக் கொண்டாள்.

கீழே சாயவிருந்த அவளை அவனும், வனிதாவும் பிடித்து அருகில் கிடந்த அந்த ஈஸிசேரில் படுக்க வைத்தனர்.

அப்போது அவள் அவர்களுக்குப் புரியாத புதிராக அந்த ரகசியத்தைத் தன் இதயத்தில் வைத்துப் பூட்டிவிட்டுத் தன் இதயத் துடிப்பை நிறுத்தி விட்டிருந்தாள். அவள் கண்கள் அந்தப் படத்தில் நிலைகுத்தி நின்றிருந்தன!



"சீ கன்யா! உனக்கு ஃபோன்!"

வீட்டிலிருந்து எழுந்து வந்து ரிஸீவரை எடுத்துப் பேசினாள் சுகன்யா. "ஹலோ, சுகன்யா ஹியர்."

"ஹலோ, ஐ ஆம் ராஜா ஸ்பீக்கிங்!"

ஒருகணம் சுகன்யாவுக்கு நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. 'இவர் எதற்காக ஃபோன் செய்கிறார்.?'

மறுமுனையில் குரல் கேட்டது: "ஹலோ, சுகன்யாதானே? என்ன பதிலேயில்லே?"

"ஆ... ஆமாம்... ஆமாம்... சுகன்யா தான் பேசறேன்... சொல்லுங்கள்!"

"நோ, நோ... இது ஒரே வரியில் சொல்லக் கூடிய விஷயமில்லே... நேரே மனம் விட்டுப் பேச வேண்டும்!"

'என்ன பேசப் போகிறார் இவர்? என்னிடம் நேரில் மனம் விட்டுப் பேச என்ன இருக்கு? கேட்க வேண்டியதையெல்லாம் பெண் பார்க்க வந்தபோதே கேட்டு விட்டார்களே?.. ஒருவேளை என்னைப் பிடிக்கவில்லை யென்று சொல்லப் போகிறாரா? அப்படியானால் ஒரு வரி கார்டில் எழுதிப் போடலாமே?... அல்லது வரதட்சணை சீரெல்லாம் அதிகமாக வேண்டுமெனக் கேட்கப் போகிறாரோ?... அதை அப்பாவிடம் கேட்கலாமே...' — சுகன்யாவின் மனத்தில் எண்ணங்கள் அலைமோதின.

"ஹலோ... என்ன பதிலேயில்லே?..." மறுமுனையில் குரல் கேட்டது.

"ஒன்றுமில்லே... அப்பாவிடம் பேசிக் கொள்ளலாமே?"

"பேசிக் கொள்ளலாம்தான். பட் ஐ ஃபீல் வெரி டெலிகேட். அதோட, நம்ம வயசு உள்ளவங்களாலே தான் இந்த விஷயத்தின் பரிமாணத்தை நல்லாப் புரிஞ்சுக்க முடியும்.."

"ம்... சரி!"

"தேங்க்யூ... ஈவினிங் ஐந்தரை மணிக்கு மெரினாவில் 'எழிலகம்' எதிரே சந்திக்கலாம். ஓ. கே?"

"ஓ. கே. ஆனால், அரைமணியிலே என்னை அனுப்பிடணும்... அம்மா தேடுவா!"

இரண்டு நாட்களுக்கு முன்புதான் சுகன்யாவைப் பெண் பார்த்து விட்டுப் போயிருந்தான் ராஜா. ராஜாவைச் சுகன்யாவின் பெற்றோருக்கு மிகவும் பிடித்திருந்தது. அவனுடன் தன் வாழ்வு இணைந்தால் எத்தனை இன்பமாக இருக்குமென எண்ணியெண்ணி மகிழ்ந்தாள் சுகன்யா. அந்தச் சிவந்தமேனியும் எடுப்பான தோற்றமும் அழகாகச் சுருண்டிருந்த கேசமும் மீண்டும் மீண்டும் அவள் மனத்திரையில் நிழலாடின.

சுகன்யா பட்டப்படிப்பு முடித்துவிட்டு, பாங்க் ஒன்றில் பணி புரிந்து வந்தாள். வேலை பார்த்துத்தான் சாப்பிட வேண்டுமென்ற நிலையில்லை அவளுக்கு. பெரிய பிஸினஸ்மேனான அவளது அப்பாவுக்கு ஒரே மகள். லட்சக் கணக்கில் பணம் புரண்டது. சுகன்யாவின் அழகுக்கும் பணத்துக்கும் அவளைக் கல்யாணம் செய்து கொள்ளப் போட்டி போட்டுக் கொண்டு வந்தனர். அவர்களையெல்லாம் ஒரேயடியாக ஒதுக்கித் தள்ளினார் சுகன்யாவின் அப்பா. ஏழையானாலும் பொறுப்பானவனைத் தேடினார்.

அப்போதுதான் அவர் ராஜாவைப் பற்றிக் கேள்விப் பட்டார். அவர் எதிர்பார்த்ததற்கும் மேலாக ராஜா இருந்துவிடவே, எப்படியாவது கல்யாணத்தை முடித்துவிடத் தீர்மானித்தார்.

ராஜா மத்திய அரசு அலுவலகமொன்றில் 'அக்கௌண்ட்ஸ் ஆபீஸ'ராகக் கைநிறையச்



சம்பளம் வாங்கினான். ஆனாலும் குடும்பத்தில் மூத்தவனாகப் பிறந்து விட்டதால், அப்பாவுக்குத் தோள் கொடுக்க வேண்டியவனானான். கல்யாணத்திற்கு நிற்கும் இரண்டு தங்கைகள், காலேஜ் படிக்கும் இரு தம்பிகள் — எல்லோரின் எதிர்காலமும் ராஜாவின் சம்பளத்தை எதிர்நோக்கியிருந்தது!

சுகன்யாவைப் பெண் பார்க்கப் போனபோதே அவளை ரொம்பப் பிடித்து விட்டது ராஜாவின் பெற்றோருக்கு. அவளைவிட, அவளுடன் வரப்போகும் பணத்தை ரொம்பப் பிடித்திருந்தது. வேலை பார்க்கும் மருமகளாகத் தேடிக் கொண்டிருந்தவர்களுக்கு, வேலை பார்ப்பவளும் சொத்து இருப்பவளுமான மருமகள் கிடைத்தபோது, தம் மகனின் அபிலாஷையைப் பற்றி நினைத்துக் கூடப் பார்க்கவில்லை!

இந்தநிலையில், ராஜா போனில் கூப்பிடவே என்ன சொல்லப் போகிறான் என்று மனத்தை அரித்து எடுத்தது. 'ஒருவேளை பிடிக்கவில்லையென்று அவன் சொல்லி விடுவானோ? அப்படியானால் அதைத் தன்னால் தாங்கிக் கொள்ள முடியுமா?' என்று ஒருகணம் யோசித்துப் பார்த்தாள். அந்த நினைவே வேப்பங்காயாகக் கசந்தது.








பிரச்னைக்குரிய அன்றைய மாலைப் பொழுதை எதிர் நோக்கிக் காத்திருந்தாள்!

அந்தக் கடற்கரைச் சாலையில் 'எழிலகம்' எதிரே புல்வெளியில் காத்திருந்தாள் சுகன்யா.

பல்கலைக் கழகக் கடிகாரம் ஐந்தே முக்காலைக் காட்டியது. 'ஐந்தரைக்கு வருவதாகச் சொன்னவர் இன்னும் வரவில்லையே?... ஆறு மணிக்குள் வரவில்லையானால் அம்மா வேறு தேடுவாளே? எப்படிச் சமாளிப்பது?' — மனத்தில் ஏற்பட்ட கவலையின் நிழல் முகத்தில் தெரிந்தது.

சில நிமிடத்திலெல்லாம் ஸ்கூட்டரில் வந்து சேர்ந்தான் ராஜா. "ஸாரி மிஸ் சுகன்யா! ஆபீஸில் கிளம்பும் போது ஒரு சிறு 'பிராப்ளம்! அதனை 'ஸால்வ்' பண்ணிட்டு வரவேண்டியதாயிற்று!"

"இட்'ஸ் ஆல் ரைட்! விஷயத்தைச் சொல்லுங்கள்!"

"ஓகே... அரை மணியிலே போயிடலாம். ஐ வில் டிராப் யூ... மணலில் உட்கார்ந்து பேசலாமே?"

"ம்... சரி!"

இருவரும் மணலில் எதிர் எதிராக உட்கார்ந்து கொண்டனர்.

"மிஸ் சுகன்யா, விஷயத்தை எந்த இடத்திலிருந்து எப்படி ஆரம்பிப்பது என்று புரியவில்லை! ஏன்னா, எப்படி சொன்னாலும் அந்தப் பிரச்னையின் ஆழத்தை நீ நன்னா புரிஞ்சிப்பேன்னு எனக்குத் தெரியல்லே!"

அவள் மௌனம் சாதித்தாள்!

"என் வீட்டில் உன்னை எல்லோருக்கும் ரொம்பப் பிடிச்சிருக்கு!"

"ரொம்ப சந்தோஷம்! மருமகளா வரப்போறவளுக்கு இதைவிட வேறென்ன வேண்டும்?"

"உன்னைவிட, நீ எடுத்துட்டு வரப்போற பணத்தை, எல்லோருக்கும் ரொம்பப் பிடிச்சிருக்கு! இப்பவே அந்தப் பணத்தை எப்படிச் செலவழிக்கணும்னு அம்மா திட்டம் போடுறா!"

"இருக்கட்டுமே! என் புருஷன் வீட்டுக்குத் தானே கொடுக்கப் போறேன்!"

"ஆனா... ஆனா... ரேவதியாலே கொடுக்க முடியாதே!"

"ரேவதியா?" — சுகன்யாவுக்கு வியர்த்துக் கொட்டியது.

"அவ என் கூட ஆபீஸ்லே வேலை பார்க்கிறா, சுகன்யா! ஒரு ஏழைக் குடும்பத்திலே மூத்தவளாகப் பிறந்துட்டு, சின்ன வயசிலே அப்பாவும் இறந்துட்டதாலே குடும்பத்தைச் சுமக்கிறவ. இரண்டு தம்பியையும் தங்கையையும் தாங்குகிற தூண்... நானும் அவளும் ஒருத்தரையொருத்தர் காதலிக்கிறோம் — ரொம்பத் தீவிரமாகவே! அவளோட அடக்கம் பொறுப்புணர்ச்சி!... ஓ! ஷி இஸ் 'கிரேட்!"

"பின்னே அவளைக் கல்யாணம் பண்ணிக்கிறதுதானே! என்னை ஏன் பெண் பார்க்க வரணும்?" கோபத்தில் வார்த்தைகள் வெடித்தன சுகன்யாவிடமிருந்து.

ராஜா அமைதியாகச் சிரித்தான். ''நீ கோபப்படறது நியாயந்தான் சுகன்யா! ஆனா நான் விருப்பப்பட்டு, உன்னைப் பார்க்க வரல்லே. ஒரு கம்பல்ஷன்! உன்னோட அப்பாவும் எங்க வீட்டிலேயும் வற்புறுத்தினதாலே வரவேண்டியதாச்சு!''

''அப்படின்னா உங்க வீட்டிலே சொல்லிட்டு ரேவதியைக் கல்யாணம் பண்ணிக்கிறது தானே?''

''ரெண்டுபேர் வீட்டிலேயும் விஷயத்தைச் சொல்லிட்டோம்; அவ வீட்டிலே சம்மதம் தான்! ஆனா என் வீட்டிலேதான் அவ்வளவா சம்மதம் இல்லே... ஏன்னா, அவங்க கொஞ்ச 'நல்ல' இடமாப் பார்த்தாங்க. அப்போதான் வர்றவ கொண்டு வர பணத்திலே, பெத்த பெண்ணையும் பையனையும் கரையேத்தலாம்னு நினைக்கிறாங்க.. அந்தச் சமயத்திலே தான் உன்னைப் பற்றிக் கேள்விப் பட்டாங்க... அழகாகவும் இருக்கே, நல்ல வேலே, உங்க அப்பா சம்பாதிச்ச சொத்தெல்லாம் உனக்குத்தான்... பின்னே கசக்குமா, என்ன?''

''நீங்க முடியாதுன்னு பிடிவாதமா சொல்லி, ரேவதியைக் கல்யாணம் பண்ணிக்க வேண்டியதுதானே?''

''உன்னைப் பத்தித் தெரியாம இருந்திருந்தா, ஒருவேளை எங்க கல்யாணத்துக்குச் சம்மதிக்க இருப்பாங்களோ, என்னவோ? ஆனா உன்னைப் பத்தித் தெரிஞ்ச பிறகு அவளை மருமகளா ஏத்துக்க ஒரேயடியாய் மறுக்கிறாங்க. அவங்களை ஒதுக்கித் தள்ளிட்டு, என்னால ரேவதியைக் கல்யாணம் செஞ்சுக்க முடியும்! ஆனா கல்யாணத்துக்கு அப்புறம்தானே வாழ்க்கையே இருக்கு... அவளாலே தான் தங்களுக்கு வரவேண்டிய சொத்தெல்லாம் போயிடுச்சுன்னு அவளைக் கரிச்சுக் கொட்டிக்கிட்டேயிருப்பாங்க... வாழ்க்கை பூரா ஒருத்தியைக் கரிச்சிக்கிட்டேயிருந்தா; அவளாலே எப்படிச் சகிச்சுக்க முடியும்? நீயும் அவளைப் போல ஒரு பெண், அவ மனசை, அவளோட உணர்வுகளை உன்னாலேதான் நன்னாப் புரிஞ்சுக்க முடியும்னு நினைக்கிறேன்!''

''நான் என்ன செய்யணும்?...''

''தாங்க்யூ சுகன்யா... என்னை உனக்குப் பிடிக்கலேன்னு உன் அப்பாகிட்டே சொல்லிக் கடிதாக எழுதச் சொல்லிடு. என் வீட்டிலே அதைப் பார்த்துட்டு, — உன்னைக் கர்வம் பிடிச்சவ, அப்படியிப்படின்னு சொல்லிட்டு — நான் ரேவதியைக் கல்யாணம் பண்ணிக்கச் சம்மதிச்சுடுவாங்க!''

சுகன்யாவுக்கு மெய் சிலிர்த்தது! இப்படிப் பட்ட ஒருவரோட தனக்கு வாழக் கொடுத்து வைக்கவில்லையே என்று பெருமூச்சு விட்டாள். பணத்துக்காகவும், பதவிக்காகவும் காதலிச்சவளையும் நம்பி வந்தவங்களையும் கைவிட்டுட்டுப் போற இந்தக் காலத்திலே இப்படியும் ஒருத்தரா? அம்பிகாபதியும், அமராவதியும், லைலாவும் மஜ்னுவும் மறைந்தா போய் விட்டார்கள்? உலகில் எங்கோ எப்போதோ இப்படி ஒரு 'கோமகன்' பிறக்கிறான் போலும்!

சுகன்யா பதில் பேசாததால் ராஜாவே கேட்டான். ''வேணும்னா ரேவதியை நேரிலே வந்து உன் கிட்டே கேட்கச் சொல்றேன். சுகன்யா! ஆனா, என்னைப் பிடிக்கல்லேன்னு மட்டும் சொல்லிடு... ப்ளீஸ்!''

''ரேவதியைக் கூட்டிக்கிட்டு வாங்க! கேட்கிறதுக்கு இல்லே. அந்த அதிர்ஷ்டசாலியைப் பார்க்க விரும்பறேன்... இன்னைக்கே உங்களைப் பிடிக்கல்லேன்னு வீட்டிலே சொல்லிடறேன்... உங்க கல்யாணப் பத்திரிகையைக் கண்டிப்பா அனுப்பி வைங்க... கங்கிராஜுலேஷன்ஸ்!''

---

## எதிர்காலச் செல்வங்கள்

எனது முதல் பேத்தி. பிறந்த சில தினங்களில் பேரதிர்ச்சிக்கு உள்ளானேன். மேலண்ணத்தில் பிளவு. அதைச் சேர்ந்திருந்த உள்நாக்கும் பிரிந்து இரண்டு உள்நாக்குகள் போல் தொங்கும் காட்சி.

அதன் விளைவு. நாங்கள் மிகப் பிரியமாகப் பெயரிட்ட பேபி ப்ரியா வாயால் உறிஞ்சிப் பாலைச் சாப்பிட முடியவில்லை. புட்டிப்பால் கொடுத்தாலும் மூக்கின் வழியாக வெளியேறி விடும் விபரீதம். ஆகாரமில்லாமல் குழந்தை எப்படிப் பிழைக்கும்?

மல்லாந்தபடி படுக்கையில் படுக்க வைத்து மூக்கில் பிளவு வழியாகப் பால் ஏறி விடாமல் சிறிது சிறிதாகச் செலுத்த வேண்டும். இம்மாதிரி செய்து குழந்தை 1½ வயது வளர்ந்தால் அதற்கு ஆபரேஷன் செய்து பிளவை மூடிவிடலா மென்று டாக்டர் உறுதி யளித்தார். ஆம், அப்படியே வளர்ந்தது. பால் போட்டுவதென்றால் படாதபாடு!

தாய்ப்பால் இல்லாமல் புட்டிப் பாலையே நம்ப வேண்டியதாயிற்று. குழந்தையும் நல்லவேளையாக நன்றாக வளர ஆரம்பித்துப் படிகட்டியாக விளையாட லானாள். அவளுக்குத் தெரியாத வஸ்து இல்லே, மனிதர் இல்லே. ஒருமுறை சொன்னால் போதும். கண்ணாலேயே காட்டி விடுவாள். கையும் வேலை செய்யும். பேச்சுக் குரல் எழுப்ப முடியாது.



இப்படியே பதினெட்டு மாதமும் ஆயிற்று. சென்ற டிசம்பரில் வேலூர் ஸி. எம். ஸி. ஆஸ்பத்திரியில் ஆபரேஷனும் நடந்தது. அன்றெல்லாம் மயங்கிய நிலையில் படுக்கையில் கிடந்தாள். மறுநாட்காலை மீண்டும் மழலைச் சிரிப்பு. அட்டகாசம். பழைய புட்டிப் பால். நான்கு நாட்களில் ஆஸ்பத்திரியிலேயே ஓட்டமும் நடையும் விளையாட்டும். வாரக் கடைசியில் வீடு திரும்பல். அதுவரை கிட்டே கூட அண்டவிடாதிருந்த பெரியவரைப் பார்த்து ''மாமா'' என்ற முதல் கூக்குரல். பிறகு ''ம்ம், ம்ம்'' என்ற ''ஹம்மிங்கும்'' மழலையும் ஆரம்பமாயிற்று. பத்து நாட்களில் வாயினுள்ளிருந்த பிளவும் அடையாளம் தெரியாமல் மாயமாய் மறைந்தது. இரண்டுபட்ட உள்நாக்கும் ஒன்றாய் விட்டது. பாலுடன் இன்னவை உண்டியும் ஏற ஆரம்பித்தது. முன்பு வாய் திறவாதவள் இன்று அம்மா, மம்மி, மாமா என்று குரல் கொடுப்பது கேட்கப் பரமானந்தமாயுள்ளது.

என். வேம்புசாமி.

"ஏழுத்தாளர் குமார் என்பவரின் இல்லத்துக்கு ஒருநாள் மதிய சாப்பாட்டுக்குச் சென்றபோது அக்கம்பக்கத்தில் இருக்கும் பல பெண்மணிகள் என்னைச் சந்திக்க வந்திருந்தனர்.

அவர்களில் ஒருவர், அவர் பெயர் கூட எனக்குத் தெரியாது; நான் உணவருந்தி விட்டுக் கூடத்தில் வந்து உட்கார்ந்ததும் என் அருகில் அவரும் அமர்ந்தார். சில நிமிஷங்களுக்கு எதுவும் பேசாமல் மௌனமாய் இருந்தார். பிறகு சட்டென்று என் கைகளைத் தம் கையோடு கோத்துக் கொண்டு விசித்து விசித்து அழத் தொடங்கினார்.

நான் பயந்து விட்டேன். எதற்காக இப்படி முன்பின் தெரியாத என்னிடம் வந்து அழுகிறார்?



✖ சிங்கப்பூரில் பரிசு வில்லைகள்..



✖ போட்டியில் ஈடுபட்டிருக்கும் அலங்காரபடகு..

# மனம் கவர்ந்த மலேஷியா-(11)

எனக்குத் தர்ம சங்கடமாகப் போய் விட்டது.

அழுது கொண்டிருந்த பெண்மணியின் புறங்கையைச் சமாதானமாக மெல்ல தட்டி, "என்னம்மா சமாசாரம்? எதுக்காக இப்படி வருத்தப்படுகிறீர்கள்?" என்றேன் மெதுவாய்.

அழுகையினூடே சின்னக் குரலில் பேசவும் முற்பட்டார் அவர்:

"என் கதையை உங்ககிட்ட சொல்லணும்னு தான் நான் வந்திருக்கேன்மா... சொல்றேன்... கேட்பீங்களா?... எனக்கு வயசு முப்பத்தி அஞ்சு — நாலு பிள்ளைங்க... ஆறு மாசம் முன்னாலே எங்க அக்காவுக்கு உணவுக் குழாயிலே புத்து நோய் கண்டு ஆஸ்பத்திரியிலே சேர்த்தோம். தாங்க முடியாத அவஸ்தைப்பட்டு அவுங்க ஆஸ்பத்திரியிலே இறந்துட்டாங்க. அவுங்களோடு இருந்து அவுங்க பட்ட மரண வேதனையைக் கண்கூடாப் பார்த்தப்போ, இனிமே இந்த ஆஸ்பத்திரிப் பக்கம் தலை வைத்துப் படுக்கக் கூடாதுன்னு சபதம் பண்ணிக் கிட்டேன். என்னால அங்கே இருந்த சூழ்நிலையைத் தாங்கிக்க முடியாம அப்படி நினைச்சிக்கிட்டேன். ஆனால் பாருங்



சிவசங்கரி

கம்மா... இரண்டு மாசம் முன்னலை எனக்கு ரத்தப் போக்கு கண்டு டாக்டர் கிட்டே போனேன்: கர்ப்பப் பையிலே புத்து நோய் வந்திருக்குன்னு சொல்லி உடனடியாக ஆபரேஷன் பண்ணிக் கர்ப்பப் பையை எடுத்துட்டாங்க... ஒரு மாசம் ஆஸ்பத்திரியிலேயே இருந்தேன்... வீட்டுக்கு வந்து ஒரு மாதம் தான் ஆகிறது...''

கொஞ்சம் நிறுத்திய பெண்மணிக்குத் துக்கம் நெஞ்சை அடைப்பது அவர் தவித்த தவிப்பில் எனக்குப் புரிந்தது –

''என் புத்துநோய் முத்திப்போய் பரவிடுச்சாம் – கோபால்ட் ட்ரீட்மெண்ட் எடுத்துக்கறேன்... எங்கக்கா பட்ட மரண வேதனையை நானும் எப்பலேந்து படத் தொடங்கப் போறேனே தெரியலே... என் பசங்க நாலும் அறியாப் பிள்ளைங்கம்மா... அவங்களை நினைச்சா மனசு ஆடிப்போகுது... நான் யாருக்கு என்ன கெடுதல் பண்ணினேன்? எனக்குக் கடவுள் இப்படியொரு கஷ்டத்தைக் கொடுத்திட்டாரே... ஏம்மா? மனுஷங்களோட கஷ்டத்தை வைச்சுக் கதை எழுதறீங்களே. என் வேதனை உங்களுக்குப் புரியுதா? என் அவலத்துக்கு ஒரு வழி சொல்லுங்கம்மா...''

அந்தப் பெண்மணி கதறிவிட்டார்.

என் கண்ணில் கட்டிக் கொண்ட ஜலத்தை என்னாலும் அடக்க முடியவில்லை.

ஆறு மாசங்களுக்குள் அக்கா, தங்கை இருவருக்கும் புற்று நோயா? அதுவும் முற்றின நிலையிலா? கதையில் எழுதினால் எழுத்தாளரை அடிக்க வருவார்கள். நிஜத்தில் நடப்பதை யாரால் தடுக்க முடிகிறது?

அந்தப் பெண்மணிக்கு என் வயசுதான். அவர் நிலைமையில் என்னை நிறுத்திப் பார்த்த போது அவர் வேதனையின் வலி எனக்குப் புரிந்தது.

முன் பின் அறியாத என்னிடம் இவர் எந்த இதத்தை எதிர்பார்த்து இப்படித் தன் மனக் குமுறலைக் கொட்டுகிறார்?

நான் 'நண்டு' என்ற கதையில் கதாநாயகி சீதா புற்று நோய் கண்டு இறப்பதைப் படிப்படியாய்ச் சித்திரித்திருந்ததால் தன் நோயின் தீவிரத்தை என்னால் நன்கு உணர்ந்து ஆறுதல் சொல்ல இயலும் என்ற நம்பிக்கையில் பேசுகிறாரா?

அந்தப் பெண்மணியின் மடியில் ஒரு குழந்தை ஏறி உட்கார்ந்து கொண்டது.

''உங்க குழந்தையா?''-அவர் ஆம் என்றார்.

''முதல்லே கண்ணைத் துடைச்சிக்கங்க... உங்க குழந்தைகள் எதிரே நீங்க கலங்கினா, அப்புறம் அம்மாவுக்கு என்னவோ, ஏதோன்னு அவங்களும் பயப்பட மாட்டாங்களா... ...ம் கண்ணைத் துடையுங்க... இங்கே பாருங்கம்மா... உங்களுக்கு வந்தது ரொம்பக் கொடிய வியாதிதான், ஆனால் உங்க அக்கா மாதிரி நீங்களும் இறந்து விடுவீங்கன்னு ஏன் அனாவசியமா கற்பனை பண்ணிக்கிட்டுக் கலங்கறீங்க? இந்தியாவிலே எனக்குத் தெரிஞ்ச எத்தனையோ பேர் கர்ப்பப் பையை எடுத்து, கோபால்ட் வைச்சிக்கிட்டப்பறம் நல்ல திடகாத்திரமா இருக்காங்க. நீங்களும் ஏன் அப்படி இருக்கக் கூடாது? முதல்லே மனசிலே தைரியம் வேணும்... அது இருந்தாலே உடம்பின் வியாதி பாதி மறைஞ்சுடுமாம்... உங்களுக்குக் கடவுள் கிட்ட நம்பிக்கை இருக்குன்னீங்க... கண்டிப்பாக அந்தக் கடவுள் உங்களைக் காப்பாத்துவார். தைரியமா இருங்க... ப்ளீஸ், முதல்லே இப்படி கலங்கறதை விடுங்க... நம்பிக்கையோடு இருங்கம்மா –''

✱ வண்ண வண்ணப் பட்டம்.

✱ மலேசிய பிரதமர் ஓன்; அவர் மனைவி - இந்திய விஜயத்தின்போது



அந்தப் பெண்மணி தம் அழுகையை நிறுத்திவிட்டு என் பேச்சை உற்றுக் கேட்டார்.

'எத்தனையோ பேர்கள் அவரிடம் இதற்கு முன் கூறினவைகளைத்தான் நானும் திரும்பச் சொல்கிறேன் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. ஆனாலும் அவரது அபிமானத்துக்கு உரியவராக இருந்து கொண்டு நான் பேசிய வார்த்தைகள் அவருக்கு இதத்தைத் தந்ததை என்னால் புரிந்து கொள்ள முடிந்தது.

அவர் சின்னதாய்ப் புன்னகைத்தார்.

பிறகு என்னை நெருங்கி அணைத்துக்கொண்டு ''ரொம்ப நன்றிம்மா'' என்றார். எதற்கு நன்றி? நான் என்ன டாக்டரா, இல்லை புற்றுநோய் நிபுணரா?

அவருக்காக அன்றும், இன்றும் தொடர்ந்து கடவுளை நான் பிரார்த்திக்கிறேன். என்னால் வேறு என்ன செய்ய இயலும்?

**அ**ன்று இரவு அப்துல் காதர் எங்களை கெண்டிங் ஹைலண்ட்ஸுக்குக் கூட்டிச் சென்றார். அமெரிக்காவில் லாஸ்வேகஸ் இருப்பது போல இங்கு இது.

மலைகளுக்கு மேலே, பிரும்மாண்டமாக சூதாட்ட விடுதிகளையும், தங்குவதற்காக ஹோட்டல்களையும் கட்டி இருக்கிறார்கள்.

சூதாட்ட விடுதிக்குள் நுழைந்தோம். சினிமா செட் போட்ட மாதிரி கண்ணாடி சுவர்களும், கூரைகளும், தரைகளும், தொங்கும் சரவிளக்குகளும் ஆளை மயக்கின.

காஸினோவுக்குள் நுழைவதற்கு முன் இருநூறு வெள்ளி தலா டெபாசிட் பண்ண வேண்டும் என்பது விதிமுறை. கையில் இருக்கும் காசு அத்தனையும் தொலைத்து விட்டால் திரும்பிப் போகப் பணம் இல்லாமல் வாடிக்கையாளர் முழிக்கக் கூடாதே என்ற முன் ஏற்பாடாம் இது!

அவ்வளவு பணம் கொடுத்தாவது போக வேண்டுமா என்று நாங்கள் யோசித்த போது ''வாசலில் நிற்கும் சிப்பந்தியிடம் உங்கள் பாஸ்போர்ட்டைக் காட்டுங்கள்'' என்றார் காதர் தமிழில்.

பையிலிருந்து முதலில் என் பாஸ்போர்டை எடுத்துக் காட்டினேன்.

இரண்டாவது பாஸ் போர்ட்டை நான் எடுக்கு முன் காவலாளி சீன மொழியில் ஏதோ சொல்ல, ''எடுக்காதீங்க... வாங்க உள்ளே போகலாம்...'' என்று தமிழில் சொன்ன காதர், குமணனுடன் எங்களுக்கு முன்னால் விடுவிடுவென்று நடந்துவிட்டார்.

உள்ளே வந்த காதருக்கு ஒரே சிரிப்பு. நாங்கள் நாலு பேர்களுமே இந்தியாவிலிருந்து வந்த டூரிஸ்ட் என்று எண்ணி டெபாசிட் இல்லாமல் உள்ளே போகச் சொன்னாராம் காவலாளி. உள்ளூர்க் காரர்களைவிட அயல் நாட்டு உல்லாசப் பயணிகளுக்கு அங்கு சலுகை அதிகம்!

பெரிய சூதாட்டக் கூடத்தில் வரிசை வரிசையாய் ஸ்லாட் மெஷின்கள் — இந்தப் பக்கம் ரேஸ், அந்தப் பக்கம் சீட்டு.

என் கணவரும் நானும் ஐம்பது டாலர்களுக்கு விளையாடுவது, வந்தால் வரட்டும் போனால் போகட்டும் என்று தீர்மானித்தபடி சில்லறைகளை மாற்றி வந்தோம்.

குமணனுக்கு இவைகளில் ஈடுபாடு கிடையாதாம். சும்மா நின்று மற்றவர்களை வேடிக்கை பார்த்தார்.

காதர் சீட்டுக் கட்டு மேஜைகளுக்குப் போய்விட்டார்.

சுமார் இரண்டு மணி நேரம் ஆடியிருப்போம். சீட்டிலிருந்து திரும்பிவிட்ட காதர் ஸ்லாட் மெஷின்களிடம் உட்கார்ந்து விட்டார்.

ஒருவழியாய்க் கையில் கொணர்ந்த பணமெல்லாம் மிஷினால் விழுங்கப்பட்ட பிறகு வெளியில் வந்தோம்.

எங்களுக்கு முப்பது டாலர் நஷ்டம், காதருக்குப் பலநூறு வெள்ளிகள்.

''எதுக்காக அவ்வளவு பணம் நஷ்டமடையும்படி ஆடினீர்கள்?'' என்றால் சிரித்தார்.

''வாழ்க்கையே ஒரு சூதாட்டம்தானே? ஒரு நாள் வேடிக்கையாய் போனது'' என்றார்.

**ம**றுநாள் கண் விழித்ததுமே இன்றுதான் மலேஷியாவில் நாம் இருக்கும் கடைசி நாள் என்ற நினைப்பு எழுந்து மனசுக்கு வருத்தமாக இருந்தது.

பதினொரு மணிக்குக் குமணன் வந்தார்,

## பாரதியாரும் குழந்தையும்

ஒருநாள் எனது சகோதரர் தமது குழந்தையைப் பாரதியார் மடிமீது வைத்து ஆசிர்வதிக்கும்படி கேட்டுக் கொண்டார். பாரதியார் உடனே, ''கொட்டடா ஜெயபேரிகை கொட்டடா'' என்ற பாட்டைப் பாடினார். எந்தப் பாட்டையும் பாரதியார் உச்ச ஸ்தாயியில் தான் பாடுவார். அப்படியிருந்தும் நல்ல வேளையாகக் குழந்தை அழவில்லை. குழந்தை எந்த வழியில் வளர வேண்டும், அதன் உள்ளத்தில் என்னென்ன பதிய வேண்டும் என்று பாரதியின் கவிதா உள்ளம் சொல்லுகிறதோ அது உடனே வெளிப்படுகிறது. நாம் சொல்லுவது குழந்தைக்குப் புரியுமா என்பதைப் பற்றி அவருக்குக் கவலையில்லை. குழந்தைக்கு எது அவசியம் என்று அவர் நினைக்கிறாரோ அதைச் சொல்லியாக வேண்டும். அங்கேதான் கற்பனையில் சதா லயித்திருக்கும் உண்மைக் கவியைப் பார்க்கிறோம்.

—''எனது முதல் சந்திப்பு'' என்ற நூலில் ஆசிரியர் டி. எஸ். சொக்கலிங்கம்

வி. ச. வாசுதேவன்.



"நான் ஒரு பெண் என்பதையே வானம்பாடி நிர்வாகிகள் மறந்து விட்டனர். ஒரு கடைக்குக் கூட அழைத்துப் போகவில்லை" என்று வேடிக்கையாய் நான் முதல் நாள் குறிப்பிட்டதை நினைவில் கொண்டு "வாருங்கள், கே. எல். கடைகள் சிலவற்றுக்குப் போய் வரலாம்" என்றார்.

ஒவ்வொரு கடையாக ஆசை தீர ஏறி இறங்கினாலும் மலேஷியாவை விட சிங்கப்பூரில் துணி வகைகள் மலிவு என்று எல்லோரும் ஒருமுகமாய்ச் சொன்னதால் கொஞ்சமாகவே வாங்கினேன்.

மதிய சாப்பாட்டை முடித்துக் கொண்டு நேரே வானம்பாடி அலுவலகத்துக்குச் சென்றோம்.

அங்கு எளிமையாய், ஆனால் மனசைத் தொடும் இனுசில் ஒரு சின்ன பிரிவு உபசாரத் தேநீர் விருந்து. வானம்பாடியில் வேலை செய்யும் ஒவ்வொருவரும் எங்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்கப்பட்டனர். ஹாலில் நாற்காலிகள் போட்டு ஏற்பாடு செய்திருந்த கூட்டத்தில் எண்ணி முப்பது பேர்கள்தாம்.

யார் யாருக்குப் பேச விருப்பமோ அவர்கள் பேசலாம் என்று குமணன் சொல்ல, எங்கள் வருகை தங்களுள் உண்டாக்கிய கிளர்ச்சியை, பாதிப்பைச் சிலர் அழகாய் எடுத்துச் சொன்னார்கள்.

எங்கும், எதுவும் பேசாத அப்துல் காதரும், என் கணவரும் கூட பேசி ஆக வேண்டும் என்று எல்லோரும் வற்புறுத்தியதால் பேசினார்கள்.

என்னால் எதுவுமே பேச முடியவில்லை... "இப்படி ஓர் அன்புக்கு நான் அருகதை உள்ளவள்தானா? வானம்பாடி இவ்வளவு செலவழித்து இத்தனை அமர்க்களமான வரவேற்பைப் பதினைந்து நாட்களாய்க் கொடுப்பதை ஏற்க நான் தகுதி உள்ளவள்தானா? என்று தோன்றுகிறது. எல்லாவற்றிற்கும் நன்றி". என்று மட்டும் கூறி உட்கார்ந்து விட்டேன்.

ஒருவரும் 'போய் வருகிறோம்' என்று சொல்லவில்லை. நெஞ்சுக்குள் கட்டை ஒன்று அடைத்துக் கொண்ட வேதனை. பதினைந்து நாட்களில் இத்தனை பாசம் உண்டாவது, பிணைப்பு ஏற்படுவது சாத்தியமா என்ன?

(தொடரும்)




உலகென்னும் கடல்மீதில்
உவப்புடனே பவனிவர
அலையமுக்கி முன்செல்லும்
ஆற்றலுறைப் படகொன்றைச்
சிலகாலம் கடனாகச்
செய்தளித்தான் ஒருதச்சன்
வலையென்று நெஞ்சத்தை
வளைத்தெடுத்து முன்சென்றேன்

கடலாழம் தெரியாமல்
கடுகிச்செல் பயணத்தால்
கடுகளவும் பயனில்லை
கடலாழம் கண்டறிந்து
துடிப்புடனே ஆய்கின்ற
சூக்குமத்தைத் தெரிந்தெடுத்தேன்
எடுத்துவந்த வலைவீசின்
எவையேனும் கைவருமே!

வலைவிரிப்பில் குழுமினவாம்
வகைவகையாய் மீனினங்கள்
அலைதாண்டிக் கரைசேர்ந்தே
அன்னவற்றைக் கூறமைத்தேன்
பலவாறாய்க் கூவியபின்
பயன்காணச் சிலர்வந்து
விலைக்கேற்றிச் சென்றனராம்;
மிகப்பலரோ வெறுத்தனராம்!

விரும்பியவர் ஏற்பதுவும்
வேண்டாதார் வெறுப்பதுவும்
உருவமைந்த நியதியென
உலகிதனைப் புரிந்ததனால்
விரும்பியவர் மனந்தேற்றும்
வினையெண்ணி வலைவிரிப்பேன்;
வருநாளின் உயர்வதனை
மனத்தேந்தி வலைவிரிப்பேன்!



கல்கி பத்திரிகையில் போர்மனாக பணியாற்றி ஓய்வுபெற்ற திரு. T. M. ராஜாபாதர் அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி பிரேமாவதிக்கும் சிரஞ்சீவி சுந்தரத்திற்கும் சமீபத்தில் சென்னையில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. திருமணத்தில் ஏராளமான நண்பர்களும் பிரமுகர்களும் கலந்துகொண்டு மணமக்களை வாழ்த்தினர்!

வாழ்க மணமக்கள்





கலைமகள் காரியாலய புத்தக இலாகா நிர்வாகியும் எழுத்தாளருமான திரு. N. நடராஜன் ('நடனு') அவர்களின் குமாரர், இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கில் பணியாற்றும் திரு. N. பாலசுப்ரமணியன் B. Com.க்கும், A.G's ஆபீஸில் பணிபுரியும் முல்லைவாசல் திரு. R. கோபாலன் அவர்களின் குமாரி சௌ. பத்மினி (BSc)க்கும் சமீபத்தில் சிறப்பாக திருமணம் நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்.



## கல்கி

### சந்தா விவரம்

★

| | ஓராண்டு | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 38 | ரூ. 19 |
| இலங்கை (இந்திய நாணயப்படி) | ரூ. 54 | ரூ. 27 |
| இதர வெளிநாடுகள் | ரூ. 90 | ரூ. 45 |

மானேஜர்

கல்கி, சென்னை - 600032

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

## ராஜ்மோகன் காந்தி

**சி.** ஆரின் சாணக்கியம் கதர் விஷயத்திலும் செயல்பட்டது குறித்துக் காந்தி மகிழ்ந்தார். கதர் உற்பத்தியில் மற்ற எல்லா ராஜதானிகளையும் விட தமிழ்நாடே முன்னின்றது. 1927 — 28ல் தேசிய உற்பத்தியில் மூன்றில் ஒரு சதவிகிதம் இங்குதான் நடந்தது. சில நெசவாலை நிர்வாகிகள் கதருக்குள்ள கௌரவத்தையும் அதன் அதிக விலையையும் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள விரும்பி, தமது மில் தயாரிப்புக்குக் கதர் என்று பெயர் கொடுத்து விற்க முற்பட்டார்கள். இதைத் தடுத்து நிறுத்த சி. ஆர். ஒரு சட்டசபை மசோதா தயாரித்தார். 1869ம் ஆண்டின் வியாபாரக் குறிகள் சட்டப்படி கதர், காதி என்ற வார்த்தைகள், உண்மையிலேயே கையால் நூற்றுக் கைத்தறியில் நெசவான துணி வகைகளுக்கு மட்டுமே உரித்தாக வேண்டும் என்று அம்மசோதா கூறியது.

இது ஒரு புறமிருப்பினும் முதல் எதிரி மது அரக்கன்தான். அவனுக்கெதிராக சி. ஆர் தமது ஆற்றல்கள் அனைத்தையும் பிரயோகித்தார். இலக்கிய, கலை ஆற்றல்கள், நிர்வாகத் திறன், குற்றப் புலனாய்வு விஞ்ஞான அறிவு ஆகிய அனைத்தையும் பயன்படுத்தினார்.

சத்தியப் பிரமாணங்களைத் தயாரித்தார், பாடல்கள் இயற்றினார்; கொடி ஒன்றை உருவாக்கினார்; ஆர்ப்பாட்டங்கள் நடத்த ஏற்பாடுகள் செய்தார்; தொண்டர் படைக்குப் பயிற்சி தந்தார்; ஆட்சேபணைகளைச் சமாளித்தார். மிதவாதிகள் பலரையும் இந்த மதுவிலக்கு இயக்கத்துக்கு ஈர்த்தார். பிரிட்டனில் இருந்த மதுவிலக்கு ஆதரவாளர்களுடன் தொடர்பு கொண்டார். அமெரிக்காவில் மதுவுக்கு எதிராகப் போராடிய ஜான்ஸன் என்பவரைச் சென்னைக்குத் தருவித்தார்.

அவரைப் பூனைக்கால் ஜான்ஸன் என்று அழைப்பார்கள். பூனை போல இரவு நேரங்களில் மதுக்கடைகளுக்குள் புகுந்து நாசம் விளைவித்து விடுவார். பிப்ரவரி இறுதியில் வந்து சேர்ந்தார் இவர். பூனைக்கால் ஜான்ஸனின் தந்திரங்களையோ வன்முறைப் பாணிகளையோ பின்பற்றும் ஆசையோ திறமையோ சி. ஆருக்கு இல்லை என்றாலும் அவரை வியந்து போற்றுமளவுக்கு சி. ஆரை அவர் கவர்ந்தார்.

மதுவிலக்குப் பிரசாரத்துக்காக சி. ஆர். ஏராளமாக எழுதவும் பேசவும் செய்தார். இரண்டு பத்திரிகைகளுக்கு ஆசிரியர் பொறுப்பேற்றிருந்தார். இந்திய மதுவிலக்குச் சங்கத்தின் ஆங்கில சஞ்சிகையான ''புரொஹிபிஷன்'' மூன்று மாதங்களுக்கு ஒருமுறை வெளிவந்தது. மற்றொன்று ''விமோசனம்.''

இந்தத் தமிழ் மாதப் பத்திரிகை ஆசிரமத்தில் எழுதப் பெற்று, சென்னையில் அச்சாயிற்று. ஆசிரமத்திலிருந்தே விநியோகமாயிற்று. சந்தாதாரர்களுக்குப் பிரதிகளை அனுப்பும் பணியில் ஸ்டாம்பு ஒட்டுகிற வேலையைக் கூட மற்றவர்களுடன் சேர்ந்து சி. ஆர். செய்திருக்கிறார். விமோசனம் பத்து இதழ்கள் தான் வெளிவந்தது. இருப்பினும் அது தமிழ்ப் பத்திரிகை உலக சரித்திரத்தில் ஒரு நிலையான இடம் பிடித்து விட்டது.

ஏழையின் துயரத்தைத் தெளிவாகவும் அளவிடற்கரிய சோகத்துடனும் அது விவரித்தது. ''ஒரு மனிதனின் ஊக்கமும் உற்சாகமும் எந்த அளவுக்கு வளர முடியும் என்பதையும் தனி மனிதர்கள் தங்கள் திறமைகளை யெல்லாம் பொது மக்களுக்குத் தொண்டாற்றுவதிலேயே செலவழிப்பது எவ்வளவு நல்லது என்பதையும் விமோசனம் பத்திரிகை எனக்கு உணர்த்தியது'' என்றார் ஒருவர்.

ஆசிரம வாசியாகவே இருந்து உதவி ஆசிரியராகவும் விளங்கி இந்தப் பத்திரிகையின் சில பகுதிகளை எழுதியவர், பின்னால் நவீன தமிழ் இலக்கியத்தில் தனிப் பெரும் சிறப்புப் பெற்ற ''கல்கி'' கிருஷ்ணமூர்த்தி.

1929ம் ஆண்டில் சி. ஆர். தமது நாட்குறிப்பில் மதுவிலக்குப் பிரசாரச் சொற்பொழிவுகள் நடக்கும் தேதி, இடம் முதலியவற்றைக் குறித்ததோடு வரிசை எண்ணையும் குறித்துள்ளார். மொத்தம் அறுபத்திரண்டு சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். சிரமத்தை உற்சாகம் வென்றது. இடைவெளியின்றி விடாமல் சுற்றுப் பயணம் செய்து பேசினார். இந்தச் சொற்பொழிவுகளில் அவர் கடைசியாக நிகழ்த்தியது, 1929 டிசம்பரில் லாகூர் காங்கிரஸை யொட்டி நடந்த மது ஒதுக்கல் மகாநாட்டின் தலைமைப் பிரசங்கம். மதுவை அடியோடு விலக்குவது என்றும், மிதமின்றி அருந்தாது மதுவை ஒதுக்குவது என்றும் இரு சாரார் இருவிதமான பிரசாரம் நடத்தி வந்தனர். தீவிர மது விலக்கு வாதியான சி. ஆர். மது ஒதுக்கல் மகாநாட்டிலும் கலந்து கொண்டு தலைமை வகித்தார். லாகூர் காங்கிரஸுக்கு ஜவஹர்லால் நேரு தலைமை தாங்கினார். ''இந்திய மது விலக்கு இயக்கத்தின் தன்னிகரில்லாத் தலைவர் சி. ஆர். தான் என்பதில் யாருக்குமே ஐயப்பாடு இருக்க முடியாது'' என்று ஜவஹர்லால் சி. ஆர். பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார் என்றால் அதற்குத் தக்க காரணம் இல்லாமற் போகவில்லை.

மதுவிலக்கு விஷயத்தில் அரசு ஆதரவு காட்டுவது போலவும் எதிர்ப்பது போலவும் இருவிதமாகவும் நடந்து

'கல்கி' கிருஷ்ணமூர்த்தி



கொண்டது. சேலம் ஜில்லாவில் ஒரு கிராம முன்சீப் கிராமவாசிகளைக் குடிக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டதற்காகவும், நீண்டாதாரிடம் வாக்குறுதிகளைப் பெற்றதற்காகவும், மதுவுக்கு எதிரான சமூகத் தடையை மீறியவர்களுக்கு அபராதம் விதித்தார் என்பதற்காகவும் ஓராண்டு காலத்துக்குத் தாற்காலிகப் பதவி நீக்கம் செய்யப்பட்டார்.

இந்தச் சம்பவம் பற்றி யங் இந்தியாவில் எழுதிய மகாத்மா, ''இந்தியாவில் நிலவும் ஆட்சிமுறை சைத்தானைப் போன்றது என்பதைக் கிராம அதிகாரிக்கு விதிக்கப்பட்ட தண்டனை நிரூபிக்கிறது'' என்றார்.

இதற்கு மறுபுறமாகப் பொதுமக்களின் வற்புறுத்தலுக்கு இணங்கி சென்னை அரசு, மதுவின் தீமைபற்றிப் போதிக்க ஐந்து லட்சம் ரூபாய் ஒதுக்கீடு செய்தது. இந்தப் பணத்தில் ஒரு பங்கு, மிதமின்றி மது அருந்த வேண்டாம் என்று பிரசாரம் செய்யப் பிரசாரகர்களை வேலைக்கு அமர்த்துவதில் செலவாயிற்று.

வி. ஆருடைய கருத்துப்படி மனப்பூர்வமாக அரசு இக் காரியத்தைச் செய்யவில்லை: ''அரசு நியமித்த பிரசாரகர்கள் மிதமாகக் குடிக்குமாறு எவ்வளவுதான் பிரசாரம் செய்தாலும் முன்சீப்பைத் தாற்காலிக வேலை நீக்கம் செய்தது போன்ற நிகழ்ச்சிகள் அரசின் உண்மை சொரூபத்தை அம்பலப் படுத்துகின்றன. ஒதுக்கீடு செய்யப்பட்ட தொகையில் ஒரு பகுதி என்னிடம் தரப்படுமானால், அதனை அரசியல் சாயல் ஏதும் படியாத படிக்குச் சிறப்பாக மதுவிலக்குப் பிரசாரத்துக்குப் பயன்படுத்துவேன்.'' வி. ஆர். அளிப்பதாகக் கூறிய ஒத்துழைப்பு ஏற்கப்படவில்லை.

இருப்பினும் 1929 இறுதியில் சென்னை எக்ஸைஸ் கமிஷனர் இ. பி. காட்டெரல் ஆசிரமத்துக்கு விஜயம் செய்ததுடன் அதைச் சுற்றிலும் ஒரு குறிப்பிட்ட அளவு பிரதேசத்தில் மதுவிலக்கு அமலாக்கப்படலாம் என்று அரசுக்குச் சிபாரிசும் செய்தார். இது பலகாலமாகவே வி. ஆரின் கோரிக்கையாக இருந்து வந்த ஒன்று. அரசு, திருச்செங்கோடு தாலுக்காவில் முப்பத்தியொரு கள், சாராயக்கடைகளையும் அதையொட்டிய ராசிபுரம் தாலுக்காவில் இருபத்திரண்டு கடைகளையும் மூடுவதற்கு ஒப்புக் கொண்டது.

---

மாமனார் (பெருமையாக நண்பரிடம்): நம் மாப்பிள்ளைப் பழமொழிகளை இரசனையாகச் சொல்வார். ஒன்று சொல்லுங்களேன் மாப்பிள்ளை!

மாப்பிள்ளை: ஆடிக்கு அழைக்காத மாமனாரைத் தேடிப் பிடித்து உதை!

எஸ். மகாதேவன்.



இந்தப் பரீட்சார்த்த மதுவிலக்கு மூன்று ஆண்டுகளுக்கு அமுலிலிருந்தது. 1930ல் இரண்டாவது முறையாக வி. ஆர். சிறை செல்ல நேர்ந்தபோதும் இந்தப் பரீட்சார்த்தத் திட்டம் கைவிடப்படவில்லை. அந்த வட்டாரத்தில் மதுவினால் மிக அதிகமாகப் பாதிக்கப்பட்டிருந்த நீண்டாதார் மதுவின் பிடியிலிருந்து கணிசமான அளவில் விடுவிக்கப்பட்டனர்.

ஆனால் 1932ல் மறுபடி வி. ஆர். சிறை புகுந்தபோது இந்தப் பரீட்சார்த்தத் திட்டத்திலிருந்து அரசு பின்வாங்கத் தீர்மானித்தது. அடுத்த வருஷம் ஏப்ரலுக்குள் மூடிய கடைகள் எல்லாம் மீண்டும் திறக்கப்பட்டு விட்டன.

''மகாத்மா தென்னிந்தியாவில் தாம் சேகரித்த நிதியை யெல்லாம் வி. ஆரிடம் தந்து விட்டார். அவர் சோம்பேறிப் பிராமணர்களுக்குச் சோறு போட்டுத் தம்முடன் வைத்துக் கொண்டிருக்கிறார்'' என்று யாரோ எழுதியிருந்தார்கள். இந்த அபவாதத்துக்கு எப்படிப் பதிலளிக்கலாம் என்று வி. ஆர். யோசித்து எழுதிக் கொண்டிருந்தார். தமது குடிலின் திண்ணையில் அமர்ந்திருந்த அவர் கவனத்தைத் திருப்பினாள் கந்தலாடை அணிந்திருந்த ஒரு மாது. ''சாமி! சாமி!'' என்று கூவி அழுத அந்தப் பெண், ஐந்தாம் வருணத்தைச் சேர்ந்தவள் என்பது புரிந்தது. அவர் காலடியில் விழுந்து வணங்கினாள்.

'பிச்சை கேட்கிறாளோ' என்று ஒரு கணம் எண்ணினார் வி. ஆர். ஆனால் அவள் அதற்காக வரவில்லை. அவள் கணவன் வட்டிக்காரனிடம் ஐந்து ரூபாய் கடன் வாங்கியிருந்தானாம். பத்து ரூபாய் வட்டியாகத் தந்திருக்கிறானாம். இறந்து விட்டானாம். இப்போது கடன் தந்தவன், ஐந்து ரூபாயைத் திருப்பித் தராவிட்டால் இன்னும் சில நாட்களில் நடக்கவிருந்த அவளுடைய மகளின் திருமணத்தை நடக்க வொட்டாமல் செய்து விடுவதாகப் பயமுறுத்துகிறானாம்.'' இதைச் சொன்னாள் அவள்.

''கல்யாணக் காரியங்களைக் கவனி'' என்று வி. ஆர். அவளிடம் சொன்னார். ''கடன்காரன் எந்த விதத்திலாவது குறுக்கிட்டால் உடனே என்னிடம் வந்து சொல்லு. பயப்படாதே!'' அந்த மாது சென்ற பிறகு வி. ஆர். கடன்காரனுக்கு ஓர் எச்சரிக்கை அனுப்பினார். அது அவனைக் கட்டுப்படுத்தி விட்டது.

அவதூறுக்குத் தாம் எழுதிய பதிலை வி. ஆர். கிழித்துப் போட்டு விட்டார். ''என் மீது சுமத்தப்பட்ட அபவாதத்தால் எனக்கு ஏற்பட்ட வருத்தம் பாதுகாப்பற்ற ஏழைகளின் துயரத்தோடு ஒப்பிடும்போது ஒன்றுமே இல்லை யென்றுதான் கூற வேண்டும்'' என்று யங் இந்தியாவில் அவர் சில நாட்களுக்குப் பிறகு எழுதினார். ''ஆண்டவனுடைய குழந்தைகளாகிய மக்களின் துயரத்தை நாம் கவனியாமல் அலட்சியப் படுத்துவதால் அவர் நமக்கு அளிக்கும் தண்டனைதான் நம்மிடையே நிலவும் பரஸ்பர துவேஷமும் சண்டைகளும்.'' (தொடரும்)

# அணில் பணியாற்றுபவரின் அபார சாதனைகள்

**"யா**மறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்
இனிதாவது எங்கும் காணோம்"

பொன்னேரி உயர்நிலைப் பள்ளி தமிழ் மாணவர் மன்றத்தில் பேராசிரியர் டாக்டர் ம. இராசமாணிக்கம் பிள்ளை பாரதியின் பாடலை எடுத்துக் காட்டித் தமிழ் முழக்கம் செய்தபோது எட்டாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்த ஒரு 'குள்ள பாஸ்கர்' 'டக்' கென்று பெஞ்சியில் ஏறி நின்று ''தெலுங்கு மொழி இருக்கிறதே!'' என்று இடைமறித்துக் கூற, இரு சோடிக் கண்கள் அவன்மீது கோபக் கனலை வீசின. மகன் நட்டநடு அவையில் இப்படி மானத்தை வாங்கிவிட்டானே என்ற சினம் தந்தை திரு அஷ்டாவதானி சல்லா லக்ஷ்மி நாராயண சாஸ்திரிக்கு. அதுவும் தான் அப்பள்ளியிலேயே தெலுங்கு மொழி ஆசிரியராயிருந்ததால் இசகு பிசகான இந்தக் கேள்விக்குக் கண் மூக்கு காது வைத்து யார் என்ன நினைப்பார்களோ என்ற ஆத்திரம் அவருக்கு. ''ஏய் முந்திரிக்கொட்டை? என் அறைக்கு வா உன்னைக் கவனிக்கிறேன்!'' கூட்டம் முடிந்ததும் புருவம் நெரித்த தலைமை ஆசிரியர் பையனுக்கு அன்புக் கட்டளையிட்டார்.

ஏதோ உத்வேகத்தில் கேட்டுவிட்ட அந்தச் சிறுவன் தனது செயலுக்கு வருத்தம் தெரிவிக்க வேண்டியதாயிற்று. ஆனால் தந்தை யாரோ அவனைச் சும்மா விடவில்லை. பன்மொழிப்புலவர் ஆயிற்றே? அதே பள்ளியில் பத்தாவது வகுப்பில் பயின்று வந்த தனக்கு இனிய தமிழ் மாணவனான சி. பாலகிருஷ்ணனிடம் மகன் தமிழ் கற்க உடனே ஏற்பாடாயிற்று. பையனின் தமிழ்க் கண் திறந்தது. மட்டுமரியாதை தெரியாத தனது சிறுபிள்ளைத் தனத்தை நினைவுகூருகிறார், டில்லி சாஹித்திய அகாடமி தென் பிராந்தியச் செயலாளர் டாக்டர் சல்லா இராதாகிருஷ்ண சர்மா.

''இவர் தமிழ் தெரிந்த தெலுங்கரா? அல்லது தெலுங்கு தெரிந்த தமிழரா? ஆங்கில அறிவால் பூண்போடப்பட்டு இயங்கும் இவர் பம்பரமாயிருந்தால் என்ன? சாட்டையாயிருந்தால் என்ன?'' என்று கூறுகிறார் இவரை எடை போட்டுப் பார்த்த இலக்கிய விமரிசகர் ஒருவர்.

சென்னை சர்வகலாசாலையில் ''தெலுங்கு இலக்கியத்தில் தமிழ்க் கூறுகள்'' என்ற பொருள் பற்றி முதன் முதல் ஆய்வுக் கட்டுரை எழுதி Ph. Litt. பட்டத்தைத் தட்டிக் கொண்டு போனவர் இவர். ''தெலுங்கிலும் தமிழிலும் இராமாயணம்'' என்ற ஆய்வுக்கட்டுரை அனுப்பி அதே சர்வகலாசாலையிலிருந்து பட்டத்தைத் தாண்டில் போட்டு இழுத்த முதல் மாணவரும் இவரே. தெலுங்கிலும் தமிழிலும் உள்ள இராமாயணங்களைக் கரைத்துக் குடித்து இம் மொழிகளுக்கிடையே பாலம் போன்று விளங்கும் முதல் மனிதர். ''இராமர் 'சேது' கட்ட உதவிய அணிப்பிள்ளை போன்றது எனது பணி!'' என்று அடக்கத்துடன் கூறும் இவரது சாதனைகள் பல.

''தேசிங்கு மன்னன் கதை'' என்ற நாடோடிப் பாடல் போன்ற கதையைத் தமிழில் படித்த இவர் உடனே ''ஜிஞ்சிக் கோட்டை'' என்று தெலுங்கில் ஒரு புத்தகம் எழுதி விட்டார். இதுவே இவர் சூட்டிக் கொண்ட முதல் இலக்கிய சுக்கிலாம்பரதரம் ஆகும். அதன் பின்னர் இவர் தமிழிலிருந்து தெலுங்குக்கும் தெலுங்கிலிருந்து தமிழுக்கும் மொழி பெயர்த்த பண்டைய, நவீன இலக்கியங்கள் எத்தனை எத்தனையோ!

இருபத்தியாறு நவீன தமிழ் இலக்கியக் கர்த்தாக்களைத் தெலுங்கு தேசத்துக்கு அறிமுகப்படுத்திய பெருமை இவருடையது. முதன் முறையாகத் தமிழ் இலக்கிய வரலாறு



திரு ராதா கிருஷ்ண சர்மா

எழுதிய தெலுங்கு நூலாசிரியர் இவர். ஆந்திரப் பிரதேச சாகித்திய அகாதமி ஆதரவில் வெளிவந்தது இந்த நூல்.

அகராதி எழுதி அனுபவம் பெற்ற இவர், இப்போது தமிழ் — தெலுங்கு அகராதியொன்றைத் தயார்செய்யும் பணியில் ஈடுபட்டிருக்கிறார்.

தமிழ் — தெலுங்கு பரஸ்பர வளர்ச்சிக்குப் பாடுபடும் டாக்டர் சல்லா இராதா கிருஷ்ண சர்மாவின் சேவை, இவர் எழுதும் இராம காவியம் போலவே நீளட்டும் என வாழ்த்துவோம்.

-சுந்தரேசன்

# தெய்வம் தான் துணைவன்

''தெய்வம் தான் துணைவன்'' என்றார் டைரக்டர் எம். ஏ. திருமுகம்.

''நீங்கள் டைரக்ட் செய்ததிலேயே உங்களுக்குப் பிடித்தமான படமென்ன?'' என்ற கேள்விக்குத்தான் மேற்கண்டவாறு அவர் பதில் கூறினார்.

''நான் ஏதோ புதிராகக் கூறுவதுபோல் நீங்கள் நினைக்க வேண்டாம். எனக்கு மட்டுமல்ல. எனது தமையன் மறைந்த சாண்டோ சின்னப்ப தேவருக்கும் தெய்வம் தான் துணைவன். கோயில்களுக்கு ஏராளமாக வாரி வழங்கியுள்ள அவரிடம் ஒரு சமயம் கையில் பணமில்லை. அப்பொழுது பார்த்து ஒரு முருகன் கோயில் சம்பந்தப்பட்டவர்கள் அவரிடம் வந்து தங்கள் கோயிலுக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று கோரினார்கள். பத்து ரூபாய் வட்டிக்குப் பணம் கடன் வாங்கிக் கொடுத்தனுப்பினார் தேவர். கடன் பட்டாவது தெய்வ கைங்கரியம் செய்ய வேண்டுமென்பது அவர் எண்ணம். அவர் ஒன்று அல்லது இரண்டு படங்கள் எடுத்து விட்டால் மூன்றாவது படம் கண்டிப்பாக முருகனைப் பற்றியதாகத்தான் இருக்கும்.''

''வசூலில் சாதனை ஏற்படுத்துமளவுக்குப் படத்தின் சிறப்பு அம்சங்களென்ன?''

''அறுபடை வீட்டுக்கும் சென்று அங்குள்ள முருகனையும் அவனது கோயில்களையும் நாங்கள் கண்டது மட்டுமல்லாமல் படம் பார்க்கும் எல்லோரையும் காண வைத்தோம். வெறும் கோயில்களை மட்டும் காட்டிவிட்டால் போதாது என்பது என் தமையனார் வாதம். அதனால் ஒவ்வொரு திருத் தலத்திலும் அவர்கள் கொண்டாடும் பெரு விழாக்களையும் இணைத்துப் படம் பிடித்தோம். உதாரணமாக, திருச்செந்தூரில் ஒரு கோடி பேர் பங்கு கொள்ளும் கற்பூரத் திருவிழா, பழனி தைப் பூசத் திருவிழா, திருத்தணி ஆடிக் கிருத்திகை திருவிழா இப்படி அறுபடை வீட்டிலும் கொண்டாடும் விழாக்களைக் காண்பித்தோம். தேவர் படமென்றால் மிருகங்கள் இல்லாமல் படமிருக்காது என்பது எல்லோரும் அறிந்ததுதான். ஆனால் முருகன் படத்தில் எப்படி மிருகத்தை வரவழைப்பது? முருகன் சம்பந்தப்பட்ட பறவைகளான மயிலும் சேவலும் இருக்கின்றனவே! இதில் மயிலை நாங்கள் எடுத்துக் கொண்டோம். ஜெயாவை அசோகன் தவறான எண்ணத்துடன் நெருங்கி வரும்போது மயில் வந்து அசோகனின் கண்ணைக் குத்தி ஜெயாவைக் காப்பாற்றுவது போல் அமைத்தோம். இந்தக் காட்சி சிறந்த ஆங்கிலப் படங்களுக்கு நிகராகப் படமாக்கப் பட்டிருப்பதாக எல்லோரும் பாராட்டினார்கள். இதேபோல் மற்றொரு காட்சியும் சிறப்பாகப் படமாக்கப் பட்டிருப்பதாக எல்லோரும் கூறியது, பாம்பு மயில் சண்டைதான். இந்தப் படம் சிறப்பாக ஓடியதற்கு மற்றொரு

எம்.ஏ.திருமுகம் பேட்டி







'தெய்வம்' படத்தில் சௌகார் ஜானகி, ஸ்ரீகாந்த், அசோகன், வாரியார், தேவர்

காரணம் ஆறு பாடல்கள். ஆறும் மணிமணியான பாடல்கள். பக்திப் பாடல்களைப் பாடும் பித்துக்குளி முருகதாஸ், ராதா ஜெயலட்சுமி, கே. பி. சுந்தராம்பாள், டி. எம். எஸ்., சீர்காழி, பெங்களூர் ரமணி அம்மாள் ஆகியோர் பாடுகின்றனர்.

''எல்லாப் பாடல்களுமே இசைத் தட்டு விற்பனையில் பல ரிகார்டுகளை முறியடித்து விட்டன!''

''தெய்வம் தான் துணைவன். இதில் மக்கள் எதை அதிகம் விரும்பினார்கள்?''

''தெய்வம் படத்துக்குத்தான் அதிக ஆதரவு. அவர்கள் விருப்பம் தான் என் விருப்பம். மக்கள் குரலே மகேசன் குரல் இல்லையா?''

''உங்கள் படம் ஒரு டாக்குமெண்டரி போன்றதுதானே?'' என்றேன்.

''ஆமாம் டாகுமெண்டரிதான். ஆனால் வெற்றிகரமான டாக்குமெண்டரி. சிறந்த கதையம்சம் உள்ள எத்தனையோ பல சமூகப் படங்களை விட மக்களின் மனத்தை அதிகமாகக் கவர்ந்த டாக்குமெண்டரி படம் இது என்பதில் பெருமையடைகிறேன்'' என்றார் திருமுகம்.

பேட்டி : 'சவன்'

---

## கத்தரிக்காய் மேல் குற்றமா?

ஒரு முரடனான அரசனுக்குச் சமயோசிதமாகச் சமாளிக்கக்கூடிய மந்திரி இருந்தான். அரசன் எது சொன்னாலும் 'ஆமாம் சாமி' போட்டு அரசனது கருத்தை ஆமோதித்துத் தனது பதவியைக் காப்பாற்றிக் கொள்வான்.

ஒருநாள் அரண்மனைச் சமையலில் கத்தரிக்காய் சேர்த்துச் சமைத்திருந்தார்கள். சமையல் ருசியாக இருக்கவே அரசன் மந்திரியிடம் ''கத்தரிக்காய் இன்று ருசியாக இருக்கிறதே!'' என்றவுடன், மந்திரி, ''ஆமாம் அரசே! அதனால்தான் இறைவன் அதற்குக் கிரீடம் வைத்தும் பிறப்பித்திருக்கிறான்'' என்று சாமர்த்தியமாகக் கூறி ஒரு கத்தரிக்காயை எடுத்து அதன் காம்புப் பகுதியை அரசனிடம் காட்டினான். அரசனும் அதை நம்பினான்.

கொஞ்ச நாட்கள் கழித்து மறுபடியும் சமையலில் கத்தரிக்காய் சேர்த்து இருந்தனர். அரசனுக்கு அன்று மனநிலை சரியாயில்லை. ஆகவே கோபம் கத்தரிக்காய் மேல் பாய்ந்தது. கோபமாக மந்திரியை அழைத்து ''இன்றைக்குக் கத்தரிக்காய் மிகவும் கசக்கிறதே! ஏன்?'' என்றான்.

உடனே மந்திரி ''ஆம் அரசே! அதன் கொட்டத்தை அடக்கத்தான் இறைவன் அதன் தலையில் ஆணி அடித்து வைத்திருக்கிறானே! பார்த்தீர்களா?'' என்று அதே காம்புப் பகுதியைக் காட்டினான்.

அரசன் கோபம் போன இடம் தெரியவில்லை.

—புராணச் சொற்பொழிவில் மதுரை கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் கூறியது. கேட்டவர்: ''சங்கரி புத்திரன்.''



# கவரிமான் பட விமரிசனம்

இருநூறை முடித்து முந்நூறுக்கு முன்னேறும் முதல் படமாக வெளி வந்திருக்கிறது நடிகர் திலகத்தின் கவரிமான். தன் மனைவி மாற்றானுடன் தன் படுக்கையில் பிணைப்புண்டு கிடப்பதைக் கண்டதும் சராசரி மனிதனுக்குரிய ஆத்திரமும் கோப வெறியும் கொண்டு அவளை அடித்துக் கொன்று விடுகிறான் தியாகராஜன். ஆனால் மனைவியைக் கொல்லும் சூழ்நிலையைக் குடும்ப கௌரவம் கருதி வெளியிடாமல் சிறைக்குப் போகிறான். காரணம் தெரியாமல் தந்தையின் காரியத்தை மட்டுமே கண்ட அவர் மகள் (குழந்தை பபிதா) தந்தையை வெறுக்கிறாள். அந்த வெறுப்பு அவள் பெரியவளான போதும் (ஸ்ரீதேவி) வளருகிறது. வைலட்டில் பாசமிக்க மகளாக வந்த ஸ்ரீதேவி இதில் தந்தையை விஷமாக வெறுக்கும் மகளாக வருகிறார்!

நடத்தை கெட்ட மனைவியின் செயலை அத்தனை கலபமாக யாருக்கும் தெரியாமல் மறைப்பது கதைப்படி பொருத்தமாக இல்லை. வீட்டுத் தலைவியின் நடத்தை அறிந்த வீட்டு வேலைக்காரி — தகாத முறையில் பிறன் மனைவியுடன் உறவு கொண்ட அந்த நபர் (ரவிசந்திரன்) இவர்கள் என்ன ஆனார்கள்? விளக்கமில்லை. தியாகராஜனின் அண்ணா பிரபல வழக்கறிஞர் (மேஜர்.) அவர் தம் தம்பியை விடுவிக்க எவ்வித பரபரப்பும் காட்டவில்லை. போலீசும் கூட இரண்டு கொலை நடந்தும் 'கண்டுக்காமல்' இருக்கிறது. தந்தைக்கு ஏற்பட்ட அதே சூழ்நிலை மகனுக்கும் ஏற்படும் போது அவன் மனம் மாறுகிறதாம். மகன் செய்த கொலையைத் தந்தைதான் செய்ததாக அவ்வளவு கலபத்தில் ஏற்றுக் கொள்ளச் சட்டம் இடம் கொடுக்குமா? — கதையில் பல விரிசல்கள் இருந்தாலும் தனது அற்புதமான நடிப்பினால் கவரிமானுக்குக் களை ஏற்படும்படி செய்திருக்கிறார் நடிகர் திலகம். வீட்டிலுள்ளோர் 'கொலைகாரன் — சிறைப் பறவை' என்ற நோக்கில் அவனை வெறுத்து விலகும் போது சிவாஜி உருகி மருகுவது பிரமாதம். புலியாகச் சீறிச் சாடும் மகளிடம் உண்மை நிலையைக் கூற முடியாத பாசமிக்க தந்தையாகத் தவிக்கும் தவிப்பு 'டாப்'. நடிகர் திலகத்துக்கே உரிய கைவந்த கலை அது. கல்கத்தா விசுவநாதனின் நடிப்பும் — ஸ்ரீதேவியின் துடுக்கும் பாராட்டும்படி உள்ளன. வண்ணப் படப்பிடிப்பு பல இடங்களில் கழுவி விட்டதுபோல் சோபை குன்றியுள்ளது. பாடல்கள் நன்றாக இருப்பினும் நினைவில் நிற்குமா? தன் மகன், மனைவியைக் கொன்றதற்கான காரணம் தந்தைக்குத் தெரியும். குடும்ப கௌரவம் காக்கத் தன் மகன் அவமானப்படும் போது கூட தந்தை அதை வெளிப்படுத்தவில்லை. மகன் படும் அவஸ்தையை விடத் தன் அந்தஸ்தே தந்தைக்குப் பெரிதாக இருக்கிறது. இப்படிக் கோளாறான கதையைத் தொய்வில்லாமல் இயக்கிக் கொண்டு போயிருக்கிறார் எஸ். பி. முத்துராமன். கவரிமான் — துள்ளிப் பாயவில்லை — கர்ஜிக்கிறது!

—கௌசிகன்

**ஏக்கத்தில் PAYரிய ஏக்கம்!**

"கையெழுத்து போட்டுச் சம்பளம் வாங்கும்போதே உம்... இன்னும் ஒரு மாதம் இருக்கு சம்பளத்திற்கு, என்று நினைத்துப் பெருமூச்சு விடுபவன் நான்!"

அனுபவம்: பொன் மிதுனம்

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600032. Editor: K. Rajendran

## படுக்கையிலிருந்து கொண்டே நீங்கள் புகைக்கிறீர்களா?

# அவ்வாறு செய்யாதீர்கள்



**உங்கள் படுக்கையில் சிகரெட் நெருப்பு விழுந்து விட்டால் நொடிப்பொழுதில் படுக்கையறை முழுவதும் தீக்குயிறையாகிவிடும்.**

**அதன் மூலம் உங்களுக்கும் குடும்பத்தினர்க்கும் அபாயத்தைத் தேடாதீர்கள்.**

**புகைப்போர் உள்ளவிடத்து, பதுங்கியிருக்குது தீ விபத்து**

1. உறக்கம் வரும்போது நீங்கள் படுக்கை அல்லது சாய்வு இடத்திலிருந்தும் புகைக்கக் கூடாது.
2. சிகரெட்டைக் கடைசிவரை புகைக்காதீர்கள். அது உங்கள் விரலை சுடும். கீழேயும் விழுந்து விடும்.
3. நெருப்புடன் உள்ள சிகரெட்டை வைத்துவிட்டு அக்கம் பக்கம் கூட போகக் கூடாது.
4. உலோகம், மண் அல்லது கிளாஸ் போன்றவற்றாலான ஆஷ்ட்ரேயில் உள்ள தண்ணீரில் சிகரெட்டை அமுக்கி அணைத்திடுங்கள்.
5. குப்பை, கிழிந்த காகிதங்கள் போடும் கூடைகளில் சிகரெட்டை போடக்கூடாது.
6. சினிமா கொட்டகை, லிப்ட், புகைவண்டி, பேருந்து, பெட்ரோல் பம்பு ஆகிய இடங்களிலும் புகைப்பதற்கு தடை செய்யப்பட்டுள்ள மற்ற இடங்களிலும் சிகரெட் குடிக்காதீர்கள்.

லாஸ் ப்ரிவென்ஷன் அசோஸியேஷன்—நாங்கள் ஒத்த மனமுடையவர்களுடன் ஒத்துழைக்க விரும்புகிறோம். அப்படிப் பட்டவர்களின் கடிதங்களை வரவேற்கிறோம். தயவு செய்து விபரங்களுக்கு எழுதவும்.




இழப்பைத் தவிர்த்திடுவோம். வளத்தைப் பெருக்கிடுவோம்

**லாஸ் ப்ரிவென்ஷன் அசோஸியேஷன் ஆஃப் இந்தியா லிட்.**

வார்டன் ஹவுஸ், சர் பி.எம். ரோடு, பம்பாய் 400 001.

CASLPA-7-172 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியக் காசு

# கல்கி

KALKI 29-4-79
75 காசு








